ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது.

சிலம்பு ய } மெய்கண்டான் யாண்டு-எ௱௬ ஆனித்திங்கள் 1932ஹ ஜூன்மீ—ஜூலைமீ { பரல் ௬

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

### தனித்திருநேரிசை

விள்ளத்தா னென்று மாட்டேன் விருப்பெனும் வேட்கை யாலே
வள்ளத்தேன் போல நுன்னை வாய்மடுத் துண்டி டாமே
உள்ளத்தே நிற்றி யேனும் உயிர்ப்புளே வருதி யேனுங்
கள்ளத்தே நிற்றி யம்மா எங்ஙனங் காணு மாறே.

பதவுரை:

உள்ளத்தே நிற்றியேனும்=(சிவபெருமானாகிய நீ) எனது உள்ளத்தில் நிலையாக இருந்தாலும்

உயிர்ப்புளே வருதி யேனும்=நான் எனது மூச்சை எனது உடலினுள்ளே வாங்கும்பொழுது நீ அம்மூச்சுடனே வருகிறதாயிருந்தாலும்

வள்ளத்தேன் போல்=(ஒருவன் தன் முன்னே) வட்டிலில் வைத்திருக்கிற தேனை அதன் மேலுள்ள வேட்கையால் அதிலே தன் வாயை வைத்து மிக ஆவலாய் உறிஞ்சி உண்ணுதல் போல

விருப்பு எனும் வேட்கை யாலே=எனது உள்ளத்தில் நின்னிடத்தில் அன்பு காரணமாக எழுகின்ற வேட்கையினுல்

நுன்னை வாய்மடுத்து உண்டிடாமே=எனது உள்ளத்திருக்கிற உன்னை வாய் வைத்து உண்டு ஆரா இன்பம் நுகராத வண்ணம்

கள்ளத்தே நிற்றி=நான் உன்னை யறியாமலிருக்கும்படி வஞ்சகமாய் நிற்கிருய்

காணும ஆறு எங்ஙனம்=(ஆதலின் உன்னை) உணர்ந்து நுகரும் தன்மை எப்படி (உன்னைக் காணமுடியாது என்றபடி)

அம்மா=இது என்ன வியப்பு (ஆச்சரியம்)

ஒன்று விள்ள மாட்டேன்=நான் இதனைப்பற்றி யொன்றும் வாய் திறந்து யாரிடத்தினுஞ் சொல்லமாட்டேன்.

'உள்ளத்தே நிற்றியேனு முயிர்ப்புளே வருதியேனும், வள்ளத் தேன் போல விருப்பெனும் வேட்கையாலே நுன்னை வாய்மடுத் துண்டிடாமே கள்ளத்தே நிற்றி காணுமாறெங்ஙனம் அம்மா ஒன்றும் விள்ளமாட்டேன்' எனக்கொண்டு கூட்டுச்செய்து கொள்க.

விளக்கவுரை :

இந்தத் தேவாரப் பாட்டில் ஒருவன் தனது தவமுயற்சியின் பயனுகத் தனது உள்ளத்திலே இறைவனது அமுத வொளி சிறிது விளங்கக் கண்டாலும், அவ்வொளி நிலையாய் விளங்காத நிலையில் வருத்தமும் வியப்பும் அடைகின்ற அநுபவத்தை அடிகள் கூறு கின்ருர்:—

தெள்ளத் தேறித் தெளிந்துதித் திப்பதோர்
உள்ளத் தேற லமுத வொளிவெளி
கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல்
வெள்ளத் தேனுக் கெவ் வாறு விளைந்ததே.

என்று அடிகள் தனித் திருக்குறுந்தொகையில் கூறியருளினர்.

நிற்றி, வருதி இவற்றிலுள்ள இ முன்னிலை ஒருமை நிகழ்காலத் தெரிநிலை வினைமுற்று விகுதி. நிற்றி எனும் வருதி எனும்=இவற்றி லுள்ள எனும் வருங்கால வினையெச்ச விகுதி; என்ருலும் என்பது பொருள்.

உயிர்ப்புளே=உள்ளே என்பது உளே எனக் குறுகி நின்றது. சிவபெருமானுடைய சத்தியால் மூச்சு இயங்குதலினுல் உயிர்ப்புளே வருதியேனும் என்ன வள்ளத்தேன் போல என்ற உவமைச் சொற்

ளுடரில் உவமப் பொருளுக்குக் கூறப்பட்ட "விருப்பெனும் வேட்கையாலே வாய்மடுத் துண்டல்" என்பதை அவாய் நிலையால் வருவித்துக் கூற (ஒருவன்) வள்ளத்தேனை விருப்பெனும் வேட்கையாலே வாய்மடுத்து உண்டல்போல என நிற்கும். இச்சொற்களை அவாய் நிலையால் வருவித்துப் பொருள் உரைக்கப்பட்டது.

தேன்—உண்ணும் பொருளில் மிக்க இனிமையான பொருளாதலின் அது சிவபோகத்துக்கு (பேரின்பத்துக்கு) உவமையாகக் கூறப்பட்டது.

வள்ளத்தேன் என்றதனால் சேய்மையிற் சென்று வருந்திப் பெறும் மலைத்தேன் போல் அல்லது எளிதில் உண்ணத்தகுந்த அண்மையிலுள்ள தேன் உள்ளத்திலுளது என்பது குறிப்பிடப்பட்டது. சிவபெருமானை, 'தேனே யமுதே யென் சித்தமே' என்று சேந்தனர் திருவாவடுதுறைத் திருவிசைப்பாவில் கூறியிருத்தல் காண்க.

விருப்பு எனும் வேட்கை-என்னும் என்ற தெரிநிலைப் பெயரெச்சம் எனும் எனக்குறுகி நின்றது; என்னும் என்று சொல்லப்படும். விருப்பு-உள்ளத்திலே நிகழும் அன்பு; வேட்கை-உள்ளே நிகழும் அன்பு காரணமாக வெளியிலுள்ள பொருளைப் பற்றுவது. வேட்கை-(ஆசை) 'அன்பீனும் ஆர்வமுடைமை' என்றார் திருவள்ளுவ நாயனர். ஆர்வம், ஆசை, வேட்கை என்பன ஒருபொருட் சொற்கள். இங்கே விருப்பு என்னும் காரணம் காரியமாக உபசரித்துக் கூறப்பட்டது, பிறப்பென்னும் பேதைமை என்றாற்போல. கள்ளத்தே நிற்றி - சிவபெருமான் தான் நிற்பது பிறர் அறியாதபடி யிருத்தலினால் கள்ளத்தே நிற்றி என்றார்.

விள்ளத்தான் ஒன்றும் மாட்டேன் என்பதை ஒன்றும் விள்ள மாட்டேன் என மாற்றுக. தான்-அசை. விள்ளுதல்-வாய் திறந்து சொல்லுதல்.

பெரியார்கள் சிவபெருமானைத் தங்கள் உள்ளத்தில் உணரும் இன்ப அனுபவ உணர்வைப் பற்றிப் பிறரிடம் சொல்லமாட்டார்கள். அவ்வனுபவம் அறியாதவர்கள் அதனைக்கேட்டு ஒன்றும் அறிய முடியாது ஆதலின் 'கண்டவர் விண்டிலர்' என்ற பழமொழி இதனால் வந்தது. காணும் ஆறே-காணுதல் என்பது உணர்ந்து இன்பம் நுகர்தல். ஆறு-தன்மை. ஏ-ஈற்றசை.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை

———

# ஜீ. யு. போப்

[இஃது பாளையங்கோட்டை சாராடக்கர் கல்லூரித் தமிழ்ப் பண்டிதராயிருந்த E. G. ஞானவுயிர்ப் பிள்ளையவர்கள் "நற்போதகம்" என்னும் பத்திரிகையின் 1908-ம் ஆண்டு எப்ரல் மாத இதழில் எழுதியதாகும்.]

தமிழ், தெலுங்கு முதலிய திராவிட பாஷா வித்வச் சிரோமணியாகிய ஜீ. யு. போப் 1820-ம் வரு எப்ரல்மீ 24-ம் தேதி வட அமெரிக்காவைச் சேர்ந்த நோவஸ் ஸ்கோஷியா என்ற தீப கற்பத்தில் வியாபாரியும், கப்பல் வர்த்தகருமான ஜான் போப் என்பவரின் குமாரராகப் பிறந்து ஹாக்ஸ்ற்றன் கலாசாலையில் கல்வி பயின்று தேறி, உவெஸ்லிய மிஷனில் சில காலம் தேவ ஊழியம் பார்த்து, அப்புறம் 1839-ம் வரு திருநெல்வேலி நாட்டில் எஸ். பீ. ஜீ. மிஷன் சாயற்புரம் என்ற இடத்தில் தேவ ஊழியத்தை அரிய பெரிய சாமர்த்தியத்துடன் பத்து ஆண்டுகளாக நடத்தி, செமினேரி என்ற கலாசாலையிலும், இங்கிலீஷ், கிரீக், தமிழ், வேத சாஸ்திரம் முதலிய பற்பல விஷயங்களைக் கற்பித்து வந்ததுடன், தாமும் தமிழ்ப்பாஷையைப் பிழையறப் பேசவும் எழுதவும், இந்நாட்டில் தேர்ந்த கவிராயர்கள் பண்டிதர்களிடம் கற்று* பாடசாலையில் பயின்றுவரும் பற்பல தரமும், அறிவுமுள்ள மாணவர்கள், தேர்ச்சியும் அறிவு மடையும் பொருட்டு, 1-ம், 2-ம், 3-ம் இலக்கணங்களை யாவரும் எளிதில் வாசித்தறிந்து கொள்ளும்படி எளிதான நடையில் செய்து வந்ததுமன்றி இந்தியாவிற்கு மிஷன் சர்க்கார் உத்தியோகமாய் வந்துகொண்டிருக்கும் ஆங்கிலேயர் எளிதில் தமிழ்ப்பாஷையைக் கற்றுக்கொள்ளும்படி போப்ஸ் ஹாண்ட் புக் என்ற உபயோகமான நூலைச் செய்தும், சங்க மருவிய நாலடியார் முதலிய நூல்களைக் கற்றறிந்தும் தேர்ந்த பண்டிதரானார்.

1849-ம் வரு இங்கிலாந்து தேசம் போய் அங்கே ஆக்ஸ்போர்ட் பட்டணத்தின் அத்தியட்சராயிருந்த உவில்பர்போர்ஸ்

* இவருக்குக் கல்வி கற்பித்தவரொருவர் திருநெல்வேலி தடிவீரையன் கோவிற்றெருவில் தம் பிற்காலத்தில் நெடுநாள் வசித்தவரும் பெரியர் அப்புநத்திரட்டு என்னும் நூலெழுதியவருமாகிய தமிழறிஞர் ஆரியங்காவுப்பிள்ளை எனத் தெரிகின்றது.

என்பவரின் சாப்லன் குருவாயிருந்து, 1851-ம்ஷு தஞ்சாவூரில் இன்னும் சிறப்பாய் விளங்கிக்கொண்டிருக்கும் பீற்றர்ஸ் கலா சாலையை ஸ்தாபித்து அப்புறம் உதகமண்டலம், பெங்களூர் என்ற இடங்களில் ஐரோப்பியரின் மக்களுக்காக ஏற்படுத்தப் பட்ட உயர்தர பாடசாலைகளின் தலைவராய் அநேக வருஷகாலம் மிகுந்த ஊக்கத்தோடும், சிரத்தையோடும் பற்பல அந்தஸ்தும் திறமையுமுள்ள சுதேச, ஐரோப்பிய சிறுவரின் கல்வி ஒழுக் கம், பக்தி முதலியவைகளுக்காக உழைத்தார்.

1880-ம்ஷு தென்னிந்தியாவைவிட்டுத் தம் சுயதேசத்துக் குப் போய்விட்டார். ஆபிரிக்காவின் பாலைவனத்தில் செழித் தோங்கும் ஒயெசிஸ் என்ற இடங்களைப்போல, இப்போதும் செழிப்பும் செயலுமாய்த் தோன்றும் சாயற்புரத்தின் வாழ்வுக் கும் இங்கிலீஷ் அறிவு, நாகரிகம் பக்தி விஷயங்களுக்கும் மூல புருஷர் இந்தப் போப்பையரே. இவருடைய ஞாபகச் சின்ன மாக இவருடைய முகப்படம் ஒன்று சாயற்புரம் செமினேரி யில் சில வருடங்களுக்குமுன் தூக்கி வைக்கப்பட்டதென்பது இதை வாசிக்கும் நண்பர்களில் அநேகருக்கு இன்னும் ஞாபக மிருக்கும்.

சுயதேசம் போன பிறகும், அநேகர் செய்கிறதுபோல வீண்காலம் கழிக்காமல் தமிழ் தெலுங்கு முதலிய பாஷையறிவு களை விருத்தி பண்ணிக்கொண்டும், இந்து தேசத்துக்குச் சர்க் கார் உத்தியோகமாய் வரும் இங்கிலீஷ் வாலிப துரைமாருக்கு அப்பாஷைகளை எழுத வாசிக்கக் கற்பித்துக்கொண்டும் தமிழ்ப் பாஷையில் தமிழ் வேதங்களாக எண்ணப்படும் திருக்குறள், நாலடியார், திருவாசகம், சிவஞானபோதம், சிந்தாமணி முத லிய பெருங்காப்பிய நூல்கள் என்றவைகளைத் தாம் கற்று வந்த துடன் தாம் மிகப் பிரீதியாய் நேசித்து வந்த தமிழ் ஜனங்களின் பிரயோஜனத்துக்காக அந்நூல்களிற் பலவற்றுக்கு இங்கிலீஷ் மொழிபெயர்ப்புக்களையும் விடாமுயற்சியுடன் செய்து வந்ததி னுல் இவரின் பேர் குன்றின்மேலிட்ட விளக்குப்போல் விளங்கி னதைக் கண்ணுற்ற கேம்பிரிட்ஜ் யூனிவெர்சிட்டியார் இவருக்கு எம். ஏ. பட்டத்தையும், கன்றர்பரி அத்தியக்ஷர் இவரின் வேத

சாஸ்திரத் திறமையைக் கண்டறிந்து வேத சாஸ்திர பண்டித ரென்று அருத்தம் கொள்ளும் டீ. டீ. பட்டத்தையும் அளித் தனர். இந்தியா செக்ரட்டரியாராலும் காலஞ்சென்ற இராணி யவர்களின் வைரோற்சவ (Diamond Jubilee) தினத்தில் வாழ்த்துதலுடன் சிறந்ததோர் தங்கப் பதக்கத்தையும் பரிசா கப் பெற்றனர்.

தமிழ்ப்பாஷையில் சிரத்தையுள்ள பலருக்கும் சந்திர சூரி யர் உள்ளவரை பிரயோஜனமாயிருக்கும் பொருட்டுப் பெரிய தோர் அகராதி செய்வதன் பொருட்டு அதற்கு வேண்டிய பிர யத்தனங்களையும் சென்ற 28 வருஷ காலமாய்ச் செய்துவந்த விஷயத்தைக் கேட்ட சென்னை கவர்ன்மென்டாரும், யூனிவெர் சிட்டியாரும் கண்ணியம் பொருந்திய போப்பையர் இந்த வயோதிக காலத்திலும் இவ்வகை அரும்பிரயாசை எடுப்பதை யறிந்து அவ்வகராதி முற்றுப்பெறவேண்டிய விஷயமாய் வேண் டிய திரவிய சகாயம் செய்வதாக ஒப்புக்கொண்டு வந்திருக்கி றார்கள். அம்முயற்சி நமது கல்வி அபிவிருத்திச் சங்கத்தா ரால் இன்னும் சிறிது காலத்துள் விக்கினமின்றி முற்றுப்பெறு மென்பதற்குத் தடையில்லை.

தமிழ் இலக்கணம் எல்லாம் செய்யுள் நடையாயிருப்ப தால் அப்பாஷையில் தேர்ந்த சிலர்க்கேயன்றி மற்றார் இலக்கண மாவதென்ன? எழுத்தாவதென்ன? பெயர் வினை என்றால் என்ன? இவைபோன்ற அற்ப விஷயங்களையும் வாசக நடை யில் சொல்லவும் பொருள் விளங்கவும் தெரியாமையால் போப் பையர் என்ற மகான் (1840—50) வருஷங்களில் தாமே தமிழ் படித்துத் தம்பெயரால் 1-ம், 2-ம், 3-ம் இலக்கணங்களைச் சிறி யோர் பெரியோர் யாவரும் எளிதில் அறிந்துகொள்ளுமாறு செய்து முடித்தனரென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் யாவர்க்கும் தெரிந்த விஷயமே.

பிரதம பாடசாலைகளில் கல்வி கற்று வரும் சிறுமியருக்குங் கூட போப்பையர் முதலாம் இரண்டாம் இலக்கணம் என்றால் தெரியும். காரியம் தெரியாத பலர் போப்பையர் என்றால் ஒரு

இங்கிலீஷ்காரன் அல்லர், பிராமண ஐயரென்றே அர்த்தப் படுத்தப் பலகாலும் கேட்டிருக்கிறேன். இவர் செய்த முத லாம் இரண்டாம் இலக்கணங்கள் யாவராலும் மிக மதிக்கப் பட்டு வருகின்றனவென்பதற்கு மேற்படி இரு இலக்கணங் களும் ஆயிரம் பதினாயிரக் கணக்காய் ஐம்பது அறுபது பதிப் புக்களா யிருக்கின்றன வென்கிற சாட்சியைவிட வேறே சான்றுகள் தேவையில்லை.

சங்க மருவிய நூல்களையும் பெருங்காப்பிய சிறுகாப்பிய நூல்களையும், தேவாரம், திருவாசகம் முதலிய நூல்களையும் வெகுவாய்க் கற்றுணர்ந்து சென்னை, கூடலூர், திருநெல்வேலி முதலிய பல விடங்களிலும் சிதறியிருக்கின்ற தமிழ்ப்பண்டிதர் பாவலர் முதலிய பலரும் ஜீ. யு. போப்பையரைத் தங்கள் குல குருவாகப் போற்றி வந்தனர் என்பது சென்ற சில வாரங்க ளாகச் சென்னை மெயில் பத்திரிகை வாசித்து வரும் நண்பருக் குத் தெரியவரும். எங்ஙனமெனில் இப்போதும் சென்னை நகரில் சென்னை யூனிவெர்சிட்டித் தமிழ்ப் பரீட்சகரின் அக்ராசன ராகிய ம-௱-௱-ஸ்ரீ தோ. இராமகிருஷ்ணபிள்ளை அவர்களுக்குச் சென்ற 1907-ம் டிசம்பர்மீ 14௳ ஆக்ஸ்போர்ட் நகரில் பாலியல் காலேஜிலிருந்து அவர் கடைசியாய் எழுதின கடி தத்தில் கண்டிருந்த கடைசி வார்த்தைகளாவன :—

“பிரிய ஸ்நேகிதரே! இந்தப் பூமியில் நானிருக்கப் போகிற நாட்கள் கொஞ்சம். ஆகையால் தீமையைவிட்டு முற்றிலும் விலகி ஆத்மாவில் உன்னதமாய் எழும்பி பரம பிதாவினிடம் போய் அவருடைய அன்பான கரத்தில் சாய்ந்து அமர்ந்து கொள்வதே நம்மெல்லோரையும் பொறுத்த கடமையா யிருக் கிறது” என்பதாம்.

கூடலூரிலிருக்கும் நல்லசாமி பிள்ளை என்பவருக்குச் சென்ற கிரிஸ்மஸ் வாரத்தில் எழுதின கடிதத்திலும் அதே பொருளுள்ள வாசகங்களை எழுதி யிருக்கின்றனர்.

இவரிடம் படித்துத் தேறினவர்களின் தொகை அனந்தம். அவர்களது வரலாற்றை விரித்துரைப்பின் மிகப் பெருகும்.

ஆயினும் இதை வாசிக்கிற நண்பரின் பிரயோஜனத்தின் பொருட்டு நமக்குத் தெரிந்த மூவரைப்பற்றி மாத்திரம் சுருக்கி உரைக்கின்றனம்.

தஞ்சை பீற்றர்ஸ் காலேஜில் பீ. ஏ. வகுப்பு மாணவர்களுக்குச் சென்ற 40, 30 வருடங்களாய் மிகுந்த சாமர்த்தியமாய் இங்கிலீஷ் கற்பித்துவந்த மிஸ்ற்றர். ஐசக் டானியல் என்ற அரிய ஆசானும், திருநெல்வேலி சி. எம். எஸ். காலேஜ் தலைமை ஆசிரியரும், முதல்வருமாகிய கனம். என்ரி ஷாப்டரையரவர்களும், காலஞ் சென்ற பிஷப் கால்டுவலின் மந்திரியும் அவருக்குக் கண்ணும் கரமுமா யிருந்து கிரீக், தமிழ், இங்கிலீஷ் முதலிய பாஷைகளில் வேத சாஸ்திர பண்டித சிரோமணியாய் விளங்கா நின்ற பீ. டி. பட்டம் பெற்ற சாமுவேல் ஐயரவர்களும் போப்பையரின் அரிய பெரிய இலௌகிக வைதிக கல்வியைக் கற்றுணர்ந்த சாட்சிகளாய் இன்றைவரைக்கும் விளங்கா நின்றனர்.

இந்த மகானுபாவரும் புலவர் திலகருமாகிய போப்பையர் உருவத்தில் குறுகிய தோற்றமுள்ளவரா யிருந்தும் அஞ்சாத நெஞ்சமும் விடாமுயற்சியும் தேகபலமும் மனோபலமும் ஆத்ம ரட்சிப்பின் நிச்சயமும் பெற்றவராய் விளங்கினரென்பது சீமையிலிருந்து அவர் பல இந்திய சிநேகிதர்களுக்கும், ஐரோப்பிய நண்பர்களுக்கும் எழுதி யிருக்கிற கடிதங்களினால் எளிதில் விளங்கும்.

போதன சக்தியில் எங்ஙனம் சிறந்தவரோ அங்ஙனம் கிரம சிட்சையிலும் மகா கண்டிப்புள்ளவர். எப்பேர்க்கொத்த மூடனையும் சிறந்த ஞான சிரோமணியாக்கும் வல்லமையும் காட்டு மிராண்டிகள் போல் ஒழுங்கற்ற எவனையும் கிரம சிட்சைக் குட்படுத்தி ஒழுங்கு நாகரிக முதலியவைகளைச் சிறிது காலத்திலடையச் செய்யக் கூடியவர்.

இத்துடன் தமாசு பேசுவதிலும் கதைகள், நொடிகள் சொல்வதிலும் சொற்றிறமை யுடையவரா யிருந்தனர். எப்படியெனில் 1840—50 வருடங்களுக் கிடையில் சாயர்புரம் செமி-

னேரித் தலைவரா யிருந்த காலங்களில் தமது உத்தம சிநேகிதரும் சகல கலைஞானியுமா யிருந்த தாமஸ் பிரதர்ட்டன் ஐயரைப் பார்க்கும்படியாக சாயற்புரத்தி லிருந்து இப்போது நாசரேத்தூர் என்றழைக்கப்படுகிற வாழையடி முதலூருக்குப் போகும் வழியில் நீர் வேட்கையினால் பண்ணைவிளையில், அக்காலத்தில் ஜான் தாமஸ் டக்கர் ஐயருக்கு வலது கை போலிருந்து சபைக் காரியங்களை விசாரித்து நடத்தித் தேவ ஊழியஞ் செய்து வந்து, சபைகளுக்காகத் தங்கள் உயிரையும் நஷ்டமென்றெண்ணின பெரிய விசாரணைப் பிள்ளையென்ற ஞான உயிர்ப் பிள்ளையவர்களின் வீட்டுக்குப்போய், வீட்டு அம்மாளைப் பார்த்து, அம்மா விசாரணைப் பிள்ளையவர்கள் எங்கே, கிராமத்துக்குப் போய்விட்டார்களோ, எல்லாரும் க்ஷேமந்தானோ வென்று தமிழர் பாவனையாய் யோக க்ஷேமங்களை விசாரித்துக் கொண்டு ஏறிப்போன குதிரையிலிருந்து இறங்கி அம்மா, மிகவும் தாகமாயிருக்கிறது, தயவுசெய்து மாதளங்காய்ச் செம்பிலே கொஞ்சம் மண் குடத்துக் குளிர்ந்த ஜலம் தாருங்கள் என்று கேட்டு, தண்ணீர் சாப்பிடப் போகையிலும்; அம்மா, நீங்கள் பிள்ளைமாராச்சே, சாதி வித்தியாசம் பார்க்கிறவர்களல்லவா ? செம்பில் வாய் வைத்துக் குடிப்பது அநாசாரமென்பீர்களே ! இதோ பாருங்கள் வாய் வையாமல் அண்ணாந்து குடிக்கிறேன் என்று கடகடவென்று கணப்பொழுதில் குடித்துவிட்டுச் செம்பையும் கவிழ்த்து வைக்கட்டுமா என்று இந்துக்கள் மாதிரியாகக் கேட்டுவிட்டு, நான் போய்வாரேன், தண்ணிருக்காக மிகவும் வந்தனம்; விசாரணைப் பிள்ளையவர்கள் வந்தால் நான் வந்ததாகச் சொல்லுங்கள், அவர்களுக்கும் சலாம் என்று மிகவும் தமாசாய்ப் பேசிப்போனதுமுண்டாம். தமிழ்ப் பாஷையைத் தட்டுத்தடையின்றித் தண்ணீர் பட்டபாடாய்ப் பேசுகிறதும் அவருக்கு இயல்பாயிருந்ததாம்.

இவருக்குப் புத்திர பாக்கியத்திலும் ஒரு குறைவு மிருக்கவில்லை. இவரின் மூத்த குமாராராகிய T. H. போப் துரை சென்னைக் கண் ஆஸ்பத்திரியில் பல வருடங்களாய்ப் பெரிய வைத்தியரா யிருந்து பென்ஷன் வாங்கிக்கொண்டு சுயதேசத்தி

லிருக்கிறார். இரண்டாவது மகன் வட இந்தியாவில் அயோத்தியிலிருக்கும் இருப்புப் பாதை மானேஜராகவும், மூன்றாவது மகன் பர்மா தேசத்தில் போதனாசிரிய முதலாளியாகிய டைரெக்டர்-அப்-பப்ளிக் இன்ஸ்ற்றக்ஷனாயு மிருக்கின்றனர். கடைசிக் குமாரர் நந்தியால் என்னுமிடத்தில் சிவில் உத்தியோகஸ்தராக விருந்து மரித்தனர். இவ்விதமாக இப்போர்போன பண்டிதர் நல்ல போராட்டம் செய்து ஓட்டத்தை நல்ல நரை வயதில் முடித்து, தமக்குக் கொடுத்த தாலந்துகளைத் தக்கபடி பிரயோகித்து நிறைந்த சந்தோஷத்துடன் தமது 88-ம் வயதில் கர்த்தருடைய இராஜ்யத்துக்குள் சென்ற பிப்ரவரிமீ 12உ பிரவேசித்து விட்டார்.

அவர் சென்று போனாலும், அவர் இயற்றிய சிறிய பெரிய நூல்கள் வரப்போகிற தலைமுறைகளுக் கெல்லாம் சாட்சியாய் நின்று மங்காப்புகழை யுண்டாக்கு மென்பதற்குச் சற்றும் சந்தேகமில்லை.

## Rev. G. U. POPE'S IMPORTANT WORKS IN TAMIL.

1. A first catechism of Tamil Grammar.

2. A second catechism of Tamil Grammar.

3. A larger Grammar of the Tamil language in both its dialects to which are added the Nannūl, Yāpparungalam and other native authorities, with commentary, copious exercises and examples taken from the best authors and an analytical index. [Second edition 1859].

4. A Tamil Poetical Anthology with Grammatical notes and a vocabulary. [1859].

5. A Handbook of the ordinary dialect of the Tamil language [Seventh edition—1904]

6. Do Part II. Key to the Exercises with notes on Analysis [Do—Do]

7. Do Part III. A Compendious Tamil English Dictionary [Do—1905]

8. Do Part IV. An English—Tamil Dictionary [Do—1906]

9. Do Part V. A Tamil Prose Reader adapted to the Handbook [Do—Do]

10. The 'Sacred' Kurral of Tiruvalluva Nāyanār with introduction, Grammar, Translation and Notes, Lexicon and concordance. [1886]

11. The Nāladiyār or Four Hundred Quatrains in Tamil with Introduction, Translation and Notes, Critical, Philosophical and Explanatory to which is added a concordance and Lexicon with authorities from the oldest Tamil writers [1893].

12. The Tiruvācagam or 'Sacred Utterances' of the Tamil Poet, Saint and Sage Māṇikka Vāsagar, the Tamil Text of the Fifty-one Poems with English Translation, Introductions and Notes to which is prefixed a summary of the life and legends of the sage, with appendices illustrating the Great South Indian system of Philosophy and Religion called the Saiva Siddhāntam with Tamil Lexicon and concordance [1900].

---

# போர்க் கருவிகள் போந்த புதுமை

## தீ நீர்.

[காழி. சிவ. கண்ணுசாமி B.A]

சென்ற ஐரோப்பியப் பெரும்போர் நிகழ்ந்த காலத்து இங்கிலாந்தின் தளவாயமைச்சராக விருந்தவர் திரு. லாயிட் ஜ்யார்ஜ் என்பவர். அவர் குடிவிலக்கு இயக்கத்தில் பெரிதும் ஈடுபட்டவர். அத்தகையார் இங்கிலாந்திலுள்ள (Alcohol) தீநீர்க் கிடங்குகளிற் பெரும்பாலனவற்றை ஒருநாள் அரசாங்கத்தின் சார்பாகக் கைப்பற்றிக்கொண்டார் என்பதைக் கேள்வியுற்று ஆங்கில மக்கள் திடுக்கிட்டு அயர்ந்து விட்டனர். குடிவிலக்கை யாதரித்த அப்பெரியார் அவைகளைக் கைப்பற்றியது போரிடுவோர்க் கெல்லாம் போதிய வளவிற்கு "உவிஸ்கி"

இறக்கி ஊற்றவா? அன்றிக் குடிவிலக் கியக்கத்தைப் பரப்பு வான் வேண்டி அக்கிடங்குகளை யடைத்து அவ்வழி குடி யெனும் கொடிய பேயை ஒழிக்கவா? இவற்றி லெதுவென்று அவர்கட்கு விளங்கவில்லை.

ஆயினும், உண்மையில் அவர் அவ்வாறு கைப்பற்றியது இவ்விரண்டுங் கருதியன்று. போர்வீரர்கட்குப் பயன்படும் என்ற கருத்துக்கு மாறாக, போர்க்கருவிகள் உண்டாக்குவதில் வேண்டிய வளவிற்குத் திரீர் இறக்கிக்கொள்ள எளிதாகும் என்ற கருத்துக்கொண்டே அவர் அவ்வாறு செய்தார். நீர்த் தன்மை வாய்ந்து மக்கட்குப் பயன்படும் பொருள்களில் நீருக்கு அடுத்தபடியாகக் கருதக்கூடியது திரீரே யாகும். வெடிச்சிகள் (Shells) செய்து முடிந்தபின் அவற்றின் சில பகுதிகளின்மேல் அவை கெடாவண்ணம் மேற்பூச்சு பூசுவது இன்றியமையாத தாகின்றது. அவ்வாறு பூசுவதற்குத் திரீரிற் சில பிசின்களைக் கரையவிட்டு அக்கலவையைப் பூசுவதே சிறந்ததாகக் கொள்ளப் பட்டது. திரீரிற் பிசின் கட்டிகளைப் போட்டால் அவை விரை விற் கரைந்து விடுகின்றன. அவ்வாறு கரைந்ததை ஒரு தூரி யக்கோல் (Brush) கொண்டு பூசுதல் எளிதாகின்றது. பூசிய வுடனே சிறிது நேரத்தில் திரீர் ஆவியாக மாறி மறைந்து விடுவ தால் பிசின்பூச்சு மட்டும் விரைவில் உலர்ந்து அழகாகத் தோன் றுகிறது. எனவே இத்தகைய பூச்சு வேலைகட்குத் திரீரை யொத்துப் பயன்படுவது வேறெந்தப் பொருளுமில்லை. மேற் கூறி யாங்கு இப்பூச்சுப் பூசப்படாமல் போர்க்கருவிகள் கேடின்றி வேண்டுங்காலம் பயன்படுமாறில்லை. எனவே திரீர் போரில் மக்கட்கு உதவி புரிவது இவ்வழியிற்றான்.

இனி, வெடி பொருள்களிற் சிற்சில கட்டிப் பொருள்க ளாக இருக்கின்றன. அவற்றில் ஒன்றை மற்றொன்றுடன் கலந்து தாள் செய்து துப்பாக்கிகள் மூலம் வெடிக்குமாறு செய்வதற்கும் இத் திரீரின் உதவி சிறந்ததாகக் கருதப்படுகி றது. எவ்வாறெனில், கலப்புறவேண்டிய இரு பொருள்களை யும் தனித்தனியே இருவேறு கலங்களிலுள்ள திரீரிற் கரைய

விட்டுப் பின் அவ்விரண்டையும் ஒன்றாகக் கலந்துவிட்டால் கலவையிலுள்ள தீநீர் விரைவில் ஆவியாக மாறி மறைந்துவிடும். கலப்புற்ற பொருள்கள் மட்டும் தூள் நிலையில் கலத்திற் றங்கிவிடும். அதைத் துப்பாக்கிகளிலிட்டு வெடி தீர்ப்பது எளிதாகும். ஆகவே இவ்வழியிலும் தீநீர் போர்க்கருவிகள் செய்வதற்குப் பயன்படுகின்றது.

இத் தீநீரிற் கலந்துள்ள பொருள்கள் யாவை யெனில் எதேன், மெதேன் என்ற இரு வளிச் சத்துகளேயாம். கரியணு ஒன்றும் நீர்வளியணு நான்கும் சேர்ந்த ஒரு அணுத்தொகுதி ஒரு மேதேன் அணுத்தொகுதியாகும். இந்த மெதேன் என்பது நிலக்கரிவளி (Coal gas)யின் இன்றியமையாத பகுதியாகும். "பெட்ரோலியம்" எனப்படும் கல்லெண்ணெயிலிருந்தும் இந்த மெதேன் வளி பெறப்படுகிறது. எதேன் என்பதோ இரண்டு கரியணுக்களும் ஆறு நீர்வளி யணுக்களும் சேர்ந்த அணுத் தொகுதியாகும். குடிவகைகளிற் பெரும்பாலுங் கலந்திருப்பது பிற் கூறப்பட்ட எதேன் என்ற வளியே. "உவிஸ்கி"யில் ஐந்திலிரண்டு பகுதி அதுவே.

மெதேன் சேர்ந்த தீநீரும் எதேன் சேர்ந்த தீநீரும் அறிவியற்றுறையில் ஒருபடித்தாகவே பயனுறுவனவாயினும் மெதேன் சேர்ந்த தீநீர் எதேன் சேர்ந்த தீநீரைப்போல் நாவிற்கு நற்சுவையளிக்காமையால் அதை எவரும் உண்பான் கருதி வாங்குவதில்லை. இதுவே "மெதிலேடெட் ஸ்பிரிட்ஸ்" என்று கடைகளில் விற்கப்படுவதாகும். புகைப்படங்கள் உலர்த்துவதற்காக தீநீர் வேண்டுமென்று கேட்டால் எதேன் சிறு பகுதியும் மெதேன் பெரும் பகுதியுங் கலந்த தீநீர்க் கலவையே கடைகளிற் கொடுக்கப்படும்.

எதேன் கலந்த தீநீரான "எதேன் ஆல்கஹால்" என்பது சர்க்கரையிலிருந்து பெறப்படுவ தொன்றாகும். சர்க்கரை யென்றால் கரும்பிலிருந்து எடுக்கப்படும் சர்க்கரைதான் என்பதன்று. வேறெந்தச் சர்க்கரைச் சத்தாயினுஞ் சாலும். அவரை, உருளைக்கிழங்கு முதலிய மாச்சத்து மிகுந்துள்ள பலவற்றி

னின்றும் இச் சர்க்கரையும், இச் சர்க்கரையிலிருந்து "எதில் ஆல்கஹா"லும் பெறப்படுகின்றது.

மெதேன் கலந்த "மெதில் ஆல்கஹால்" என்பதோ மரங்களைப் புகைத்து அப்புகையின்வழிப் பெறப் படுவதாகும். "க்ளோரோ பார்ம்" என்ற மயக்க மருந்தில் பெரும் பகுதி மெதேன் வளியேயாம். போர்மருத்துச் சாலைகளில் அளவற்றுப் பயன்படுத்தப்படும் "ஈதர்" என்ற சத்தும், நீரும் கந்தகப் புளிப்பும் (Sulphuric acid) சேர்த்துக் காய்ச்சியதாற் பெறப்படுவதேயாகும். போர்த்துறையிலும் சிறப்பாக மருத்துத் துறையிலும் நீர் எத்துணைப் பயன்படுகிறது என்பது ஒருவாறு இதுகாறுங் கூறியவற்றிலிருந்து விளங்காநிற்கும்.

மக்கள் குடிக்குங்கால் இத்தீநீர் பயக்கும் தீங்கிற்கு அளவேயில்லை. ஆனல் மருந்து வகைகள் செய்வதற்குப் பயன்பட்டு அது மக்கட்கும் விளக்கும் நலத்திற்கும் ஒரு அளவில்லையென்றே கூறலாம். பயன்படுத்தும் வகையில் அதைப் பல பொருள்களோடும் பிணைத்துப் பயன்படுத்தினல் அதற்கிணையான துணை வேறொன்றுமில்லை. தனித்து அதனை விட்டாலோ தலைவிரி கோலந்தான்.

---

# கடவுளுக்கும் உயிருக்குமுள்ள அத்துவித இயைபு

[திருவாளர் மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள்]

(சிலம்பு ௰, பரல் ௪, ௨௱௰-வது பக்கத் தொடர்ச்சி)

## XII. அத்துவிதச் சிறப்பு இயைபு

20. மேலே கூறியபடி உலக வாழ்வில் மக்கள் கல்வி கேள்வி அறிவாலும் என்னுதல் அறிவாலும் நல்லறிவுப் பெருக்கம் மேலும் மேலும் ஏற்றமாக அடையுங்கால் அவர்கள் சிறிது சிறிதாக உயிர்ப்பற்றினையும் பொருட்பற்றினையும் விட்டு உலக நெறியிலிருந்து வீட்டு நெறிக்குத் திரும்பிக் கடவுளை நோக்கு

கின்றார்கள். அவர்கள் எம்மட்டில் கடவுளிடம் பற்றுவைத்து ஒழுகுகின்றார்களோ அம்மட்டில் உயிர்ப்பற்றினையும் பொருட் பற்றினையும் விடுகின்றார்கள். அவர்களுக்கு இன்பதுன்பங்க ளோடுகூடிய உலக வாழ்வில் உவர்ப்பு உண்டாக இன்ப துன்பங் களிலேயுள்ள விருப்பு வெறுப்புக்கள் அற்று அவைகளில் ஒப்பு உள்ளம் (சமபுத்தி) உண்டாகின்றது. உலக இன்ப துன்பங்க ளிலேயுள்ள விருப்பு வெறுப்புக்கள் அறவே அந்த இன்ப துன் பங்களுக்கு ஏதுவாயிருக்கிற நல்வினை தீவினைகளிலேயும் விருப்பு வெறுப்புக்கள் அறுகின்றன. நல்வினையால் வரும் இன்பத்தி னும் தீவினையால் வரும் துன்பத்திலும் விருப்பு வெறுப்புக்க ளின்றி இன்பம் வந்த விடத்தும் துன்பம் வந்த விடத்தும் அவை களை ஒப்பான உள்ளப்பாங்குடன் நுகர்தலே இருவினை ஒப்பா கும். இருவினை ஒப்பால் அவர்களுக்கு மலபரிபாகம் உண்டா கின்றது. மலபரிபாகம் என்பது வேட்கை அறிவுச்செயல் களை மறைத்து அறியாமையைச் செய்கின்ற மலவலி தேய்ந்து மடங்கிக் கீழ்ப்படுதலாகும். மலபரிபாகத்தால் யான் எனது என்னும் செருக்கு அறும். யான் எனது என்னும் செருக்கு அறுந் தருவாயில் கடவுள் அவர்களுக்கு மானுட வடிவில் ஆசிரி யனாய் வந்து தீக்கை செய்து வீடு அடையும் வழியை உணர்த் துவன். சரியை கிரியை யோக ஞானங்கள் வீட்டினை அடை விக்கும் வழிகளாம். அவர்களிடத்திலுள்ள மலவலி தேயத் தேய மலவலித் தேய்வுக்கு ஏற்பக் கடவுளது மறைப்பு வலியும் (திரோதான சத்தியும்) சிறிது சிறிதாகக் குறைந்து தன் தன்மை நீங்கி அருள் வலியாக மாறி அவர்களிடம் பதிகின்றது. அவ் வாறு அருள்வலி பதியும் நிலைகள் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என ஒன்றுக்கொன்று ஏற்றமாய நான்கு வகைப் படும். முடிவில் அவர்கள் தீவிரதர அருட்பதிவின் பயனாக முற்றிய உண்மை அறிவை அடைந்து வீட்டின்பம் அடைகிறார் கள். இருவினையொப்பால் மலபரிபாகமும், மலபரிபாகத்தால் அருட்பதிவும் (சத்திநிபாதமும்) அருட்பதிவால் உண்மை அறி வும் உண்டாதல் ஒன்று முற்றிய பின்பே பிறிதொன்று தோன்று மென்பது பொருளன்று. இருவினையொப்பு உண்டாகிற

அளவு மலபரிபாகமும், மலபரிபாகம் உண்டாகிற அளவு அருட்பதிவும், அருட்பதிவு உண்டாகிற அளவு உண்மை அறிவும் படிமுறையினுண்டாகி மக்கள் வீடுபேற்றிற்குத் தகுதி உடையவர்களாகின்றார்கள். அத்துவிதப் பொது இயைபு நிகழும் மக்கள்உயிர்களுடைய கட்டுநிலைக் காலத்தில் கடவுள் அவைகளுடன் இயைந்து நின்று அவைகளேயாய் நிற்றல்போல கட்டுநிலை விடுதலை நிகழத்தொடங்கி அத்துவிதச் சிறப்பு இயைபு நிகழும்பொழுது மக்களுயிர்கள் கடவுளோடு இயைந்து நிற்கத் தொடங்கி அவனிடம் அடிமைபோலவும் (சரியை) மகன்போலவும் (கிரியை) தோழன் போலவும் (யோகம்) அருகில் அணுகி அணுகி முடிவில் அவனோடு ஒற்றுமைப்பட்டு நிற்கிற சத்துநெறியாகிய (ஞானம்) வீட்டு நிலையை அடைகின்றன. இவையே சுருக்கமாக மக்கள் உயிர்கள் அத்துவிதப் பொது இயைபு நிலையிலிருந்து அத்துவிதச் சிறப்பு நிலையை அடையும்படி வழிமுறைமைகளும் (Evolutionary layers) அத்துவிதச் சிறப்பு இயைபு வாழ்வு முற்றி வீட்டின்பம் அடைதலுமாம்.

## XIII. அத்துவிதச் சிறப்பு இயைபும் அதனுடன் அத்துவிதப் பொது இயைபு பொருந்தும் தன்மையும்

21. (1) அத்துவிதப் பொது இயைபு வாழ்வில் மக்களுக்கு வேட்கை அறிவு செயல்கள் பொருட்பற்று உயிர்ப்பற்றுக்களால் உண்டாகின்றன. அத்துவிதச் சிறப்பு இயைபு வாழ்வில் மக்களுக்கு வேட்கை அறிவு செயல்கள் பொருட்பற்று உயிர்ப் பற்றுக்களா லுண்டாகாமல் கடவுளைப் பற்றும் பற்றினால் உண்டாகின்றன. மக்களிடத்தில் முதலாவது பொருளையும் உயிரையும்பற்றி நடுவு நிலையான வேட்கை அறிவு செயல்கள் நிகழ்ந்த பின்பே கடவுளை மாத்திரம் பற்றிய வேட்கை அறிவு செயல்கள் நிகழும். அத்துவிதப் பொது இயையு வாழ்வில் சார்பு அன்பும் சார்பு அறிவும் அவைபற்றிச் செய்திறனும் முன் நிகழ்ந்து வேட்கை அறிவு செயல்கள் திருந்திய பின்பு அத்துவிதச் சிறப்பு இயைபு வாழ்வில் சார்பில்லாத

அன்பும் சார்பில்லாத அறிவும் அவைபற்றிச் சார்பின்றிச் செய்திறனும் உண்டாகும்.

(2) அத்துவிதப் பொது இயைபு வாழ்வில மக்கள் தங்கள் வேட்கை அறிவு செயல்களை வழங்கி மக்கட்பொதுநல அறப்பணியை இம்மையில் பொருளும் புகழும் மறுமையில் துறக்க நலமும் அடையுங் கருத்துடன் பயன்கருதிச் செய்கிறார்கள்; அப்பொழுது அவர்கள் தாங்கள் செய்யும் வினையினால் கட்டினை அடைகிறார்கள். அத்துவிதச் சிறப்பு இயைபு வாழ்வில் அவர்கள் மக்கட் பொதுநல அறப்பணியைத் தங்களுள்ளெழும் அருட்பண்பினால் ஊக்கப்பட்டுத் தங்களுக்கு யாதொரு பயனுங்கருதாது இறைபணியாகச் செய்கிறார்கள். அப்பொழுது அவர்கள் தாங்கள் செய்யும் வினையால் யாதொரு கட்டினையும் அடைவதில்லை. அத்துவிதப் பொது இயைபு வாழ்வுக் காலத்தில் பொருளும் புகழும் மறுமை நலமும் முன்னிலையாய் நின்று மக்களை ஊக்காவிட்டால் அவர்கள் தங்களுக்குள் மறைவுபட்டிருக்கிற முரட்டு வேட்கை அறிவு செயல்கள் வெளிப்பட்டுத் திருந்தி அத்துவிதச் சிறப்பு இயைபு நிலைக்குத் தகுதி உடையவர்கள் ஆகமாட்டார்கள்.

(3) அத்துவிதப் பொது இயைபு வாழ்வில் மக்கள் கடவுளுடைய பொது இயலைக் கற்றல் கேட்டல் சிந்தித்தல் அறிவுகளால் அறிந்து அவ்வறிவின் பயனாகப் பயன் கருதி உலகில் அறநெறியில் ஒழுகுகின்றார்கள். அத்துவிதச் சிறப்பு இயைபு வாழ்வில் மக்கள் கடவுளுடைய சிறப்பு இயலைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை அறிவுகளால் உணர்ந்து அறிந்து மெய்யுணர்தலின் பயனாக அறநெறிக்கு எடுத்துக்காட்டாக ஒழுகுகின்றார்கள். அத்துவிதப் பொது இயைபு வாழ்வில் மக்களுக்கு கல்வி கேள்வி சிந்தனைகளாலுண்டாகும் நல்லறிவின் பயனாக அவர்களுடைய வேட்கை அறிவு செயல்கள் திருந்தித் தூய்மை அடைந்தபின் அவர்களது உள்ளத்தில் அருளொளி விளங்கி தெளிவுணர்வு உதிக்கத் தொடங்கி அதனால் அவர்கள் அத்துவிதச் சிறப்பு இயைபு நிலைக்குத் தகுதியுடையவர்களாகின்றார்கள்.

(4) அத்துவிதப் பொது இயைபு வாழ்வில் மக்கள் தங்களின் வேறதாயுள்ள மூலப்பகுதியின்கண்ணுள்ள சாத்துவீகப் பண்பு தங்களிடத்து மேம்பட்டு விளங்கித் தோன்றுதலா லுண்டாகிய நிலையில்லாத உலக இன்பம் நுகருகின்றார்கள். அத்துவிதச் சிறப்பு இயைபு வாழ்வில் அவர்கள் தங்களுடன் அத்துவிதமாய்க் கலந்து விளங்குகின்ற கடவுளைச் சார்ந்து அதனால் நிலையான சிவஇன்பம் நுகருகிறார்கள். மக்கள் நிலையாத உலக இன்பம் நுகர்ந்து அதன் நிலையாமைத் தன்மையை உறைப்பாக அநுபவத்தில் அறிந்தால்அல்லாமல் அத்துவிதச் சிறப்பு வாழ்வில் அடையும் நிலையான சிவ இன்பத்தில் நாட்டமுடையவர்களாக மாட்டார்கள்.

(5) அத்துவிதப் பொது இயைபு வாழ்வில் மக்கள் கடவுளை அறியாதிருக்கின்றார்கள். அக்காலத்தில் கடவுள் மக்களுடன் இயைந்து ஒன்றுபட்டு நிற்கின்றான். அவர்கள் கடவுளை அறியாது யான் எனது என்னும் செருக்குக்களை உடையவர்களாகி அறியாமையால் துன்பம் அடைகின்றார்கள். அத்துவிதச் சிறப்பு இயைபு வாழ்வில் மக்கள் கடவுளை அறிந்து அவனோடு அத்துவிதமாய் இயைந்து நின்று யான் எனது என்னும் செருக்குகளினின்று முற்றிலும் நீங்கி மெய்யுணர்வு பெற்றுப் பேரின்பம் அடைகின்றார்கள். அத்துவிதப் பொது இயைபு வாழ்வில் உண்டாகும் அனுபவமே அத்துவிதச் சிறப்பு இயைபு வாழ்வுக்கு மக்களைத் தகுதி உடையவர்களாகச் செய்கின்றது.

22. அத்துவிதப் பொது இயைபுக்கும் அத்துவிதச் சிறப்பு இயைபுக்கும் உளவாகிய மேலே கூறப்பட்ட பொருத்தங்களால் உலகில் அத்துவிதப் பொது இயைபு பற்றி உலக இன்பம் கருதி வாழும் வாழ்வானது அத்துவிதச் சிறப்பு இயைபு வாழ்வுக்கும் அவ்வாழ்வு முற்றியபின் அடையப்பெறும் பேரின்பத்துக்கும் இன்றியமையாது வேண்டப்படுவதாகும் என்பது வெள்ளிடை மலைபோலத் தெளிவாகும். உலக வாழ்வு பேரின்பத்தை நேரே தடையின்றி அடையச் செய்யுந் தகுதி உடையதாயிருத்தற்கு குறிக்கோளை உடையதாயும் குறிக்கோளை அடையும் நன்னெறியையும் பண்பையும் உடைய

தாயுமிருத்தல் வேண்டும். உலக வாழ்வு வெறுக்கப்பட்டு நீக்கப்படவேண்டும் என்று ஒரு சாரார் (ஏகான்ம வாதிகள் முதலியர்) கூறும் கருத்துச் சிறிதும் பொருந்தாது. கருவி அறிவைத் துணையாகக்கொண்டு ஒருவன் உலக வாழ்வைச் செவ்விதின் நடத்தி அதன் பயனாகவே அருளறிவை அடைந்து கடவுளை உணர்ந்து பேரின்பம் அடையத் தகுதி உடையவனாகின்றான்.

## XIV. அத்துவிதச் சிறப்பு இயைபும் மக்கட் போது நலனும்

23. அத்துவிதச் சிறப்பு இயைபு வாழ்வு முற்றிய மனிதர்கள் குறைவொன்றுமின்றி நிறைவு நிலையை அடைந்த உயிர்கள். அவர்கள் பிறப்பு இறப்பு வட்டச் சுழற்சியினின்றும் நீங்கினவர்கள். அவர்கள் தத்துவ ஞானிகள். எல்லா உயிர்களிடத்துஞ் செந்தண்மை பூண்டொழுகும் அருட்குணமுடையவர்; மலையே வீழினுங் கடலே கலங்கினும் இறைவனிணையடிகளில் உறைத்து நின்று உள்ளங் கலங்காத உத்தம சீலர்; ஓடும் பொன்னும் ஒப்பாக நோக்கும் தூய உள்ளத் துறவோர். அவர்கள் தங்களுக்கென ஒன்றும் வேண்டாதவர்கள். அவர்கள் அகப்பற்று புறப்பற்றுக்களை முற்றிலுமொழித்து இறைவனது அருளிற்றோய்ந்து விளங்குந் தூயர். அவர்கள் தமிழ் நூல்களிற் பெரியார், முனிவர், நீத்தார், அடியார், அந்தணர், சிவஞானிகள், மெய்யுணர்ந்தார், மெய்கண்டார், அருளாளர் பேரறிவர் முதலிய பெயர்களால் கூறப்பட்டிருக்கின்றார்கள். அவர்களைப்பற்றித் தெய்வப்புலமைத் திருவள்ளுவர் தாமியற்றிய திருக்குறள் நூலில் பாயிரம் ௪-வது அதிகாரத்தில் "நீத்தார் பெருமை" என்று கூறியுள்ளார். அவர்கள் இறைவனுடைய பணியாளர்களாக உலகிலுள்ள உயிர்களெல்லாம் உய்யும் பொருட்டுத் திருவருள் உலகில் விளங்கும்படி பணிகள் ஓயாது செய்துகொண் டிருக்கிறார்கள். அவ்வாறு பெரியார்கள் ஒழிவின்றிச் செய்துகொண்டிருக்கும் இறைபணி உலகில் நடைபெறும்பொருட்டு உலகத்தில் வாழ்கின்ற மக்களுள் உயிர் வளர்ச்சி (Soul-evolution) முறைமையையும் அம்முறைமையை உலகில் விளங்கச்செய்ய இறைவனால் ஏற்படுத்

தப்பட்ட திட்டத்தைப் பின்பற்றிச் செய்யப்பட்டு வருகிற பெரியோர்கள் பணியையும் அறிந்த அறிஞர்கள் அப்பெரியோர்களுக்கும் உலக மக்களுக்கும் இடையில் நின்று தங்கள் திறன் அளவில் பணி செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் அக்கடமையை அறிந்து உலகில் அருள் நலம் பெருகப் பணி செய்வார்களாக.

23. அன்பிற்சிறந்த அறிஞர்களே! கடவுளுக்கும் உயிருக்குமுள்ள அத்துவித இயைபு, மிக விரிந்து பரந்த கருத்துகளடங்கிய ஒரு பெரிய பொருள் (விஷயம்). அதனை நான் என் சிற்றறிவுக்கு எட்டிய அளவில் ஒன்றுக்கொன்று தொடர்பு உடைய பதினான்கு தலைப்புகளின் கீழ் வைத்துச் சுருக்கமாகக் கூறினேன். இவ்வுரையில் கருத்து வழுக்கள் சில இருத்தல் கூடும். இருப்பின் அவைகளைத் தாங்கள் விளக்கி அறிவிக்கும்படி வேண்டுகிறேன்.

---

# சேக்கிழார்

[இலக்கணவிளக்க ஆசிரியர்பரம்பரை சோமசுந்தர தேசிகர்.]

சேந்தமிழ்ச் செல்வி சிலம்பு 10 பரல் ௬-ல் திருவாளர் கோவை இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள் சேக்கிழாரடிகளைப் பற்றிய குறிப்புக்களை வரைந்திருப்பதை நேயர்கள் படித்திருக்கலாம். அவர்கள் கூறியுள்ளவற்றில் பல ஐயப்பாடுகள் தோன்றுகின்றன. ஆங்கிலப் பெரும் படிப்பும் ஆராய்ச்சி வல்லமையுமுடைய அப் பெரியார் எம்போலியர்க்கு உண்டாகிய ஐயங்களைக் களைதல் கடமையாகும்.

முதலாவதாக 'சேக்கிழார் சுவாமிகளுக்கு உத்தம சோழப் பல்லவராயர் என்ற பட்டம் சோழனால் கொடுக்கப்பட்டது' என்று கூறுகின்றது. 'அக்காலத்தில் பட்டங்கள் ஒரு அரசனுடைய பெயரை முன்னிட்டு வைப்பது வழக்கம். உத்தம சோழன் என்பான் கண்டராதித்தருடைய மகன்; முதல் இராஜ

ராஜருக்கு முன் ஆண்டவன். 969-985 கி. பியில் ஆண்டவன். ஆகவே சேக்கிழாருக்குப் பின் சில 'ஆண்டுகளுக்குள்ளாக இப் பட்டப் பெயரையே ஒருவர் இயற் பெயராக வைத்துக் கொண்டதாகத் தெரிகிறது' என்று எழுதுகிருர்கள். இதனல் சேக்கிழாரடிகள் திருவிசைப்பாக்காரருள் ஒருவரான கண்ட ராதித்தனர் மகனர் மதுராந்தக உத்தம சோழன் காலத்தவர் என்று செட்டியார் கொண்டுள்ளதாகத் தெரிகிறது. இது உண்மையாகுமா வென்பதை ஆதாரம் காட்டி விளக்க வேண்டும்.

இரண்டாவதாக, யான் சைவ சிகாமணிகள் இருவர் என்ற நூலில் உத்தம சோழ பல்லவரையன் கோவைப்பக்கம் உத்தி யோகத்தி லமர்ந்திருந்தானென்று காட்டி அக் கல்வெட்டையுங் குறித்தேன். மேற்குறித்த கல்வெட்டிற் கண்ட வீர ராஜேந்தி ரன் என்னும் அரசன் கொங்குச்சோழனுக விருத்தல் கூடுமோ வென ஐயுறுகின்ருர்கள். அப்படிக் கொள்வதற்குப் போதிய ஆதாரம் காட்டினர்களில்லை. ஆதாரம் காட்ட வேண்டுவது அவர்கள் கடமையாகும்.

மூன்ருவதாக, 'சேக்கிழாரடிகள் திருத்தம்பியார் பாலரு வாயராகவே, கோட்டூர் மணியம்பலத்து மூலத்தான முடை யார்க்குத் திருநுந்தாவிளக்கு வைத்த சேக்கிழான் பாலருவாயன் களப்பாளராயரும், திருப்பாம்புரத்துத் திருக்கற்றளித் திருப் பணி செய்த ஆண்டார் கோற்றமங்கலத்துப் பாலருவாயரும், திருத்தருப்பூண்டியில் நிலம் வாங்கின சிவபக்தர் பாலரு வாய ரும் 'காலத்தைக் கவனிக்கு மிடத்து சேக்கிழாருடைய தம்பி யாரே' என்று குறித்துள்ளார்கள். கோட்டூரில் திருநுந்தா விளக்கு வைத்தவர் சேக்கிழார் குடியில் வந்த பாலருவாயர் மக னர் களப்பாளராயர் என்பது மேற்குறித்த கல்வெட்டு முழு மையும் ஊன்றி நோக்கப் புலனகும். திருப்பாம்புரம் திருக்கற் றளி யெடுத்தவர் கொற்றமங்கலமென்னும் ஊரிற் பிறந்த ஒரு சிவனடியாரான பாலருவாயர். இவருக்கும் சேக்கிழான் பாலரு வாயருக்கும் யாதொரு இயைபு மில்லையென்பது வெள்ளிடை. செட்டியாரவர்கள் கல்வெட்டறிக்கைகளையும் அரசாங்கத்தா

ரது கல்வெட்டுத் தொகுதிகளையும் நம்பி யெழுதி விட்டார்க ளென்றே காண்கிறது. குறித்த கல்வெட்டுப் படிகளையாவது கல்வெட்டுக்களையாவது ஊன்றி நோக்கி எழுதியதாகத் தோற்ற வில்லை. யான் கூறியது வேறுபட்டிருப்பின் கல்வெட்டுக்களைக் கொடுத்து நிரூபிக்க வேண்டியது அவர்கள் கடமை.

நான்காவதாக, 'சோழர்கள் தங்கள் உத்தியோகத்தர்களுக் குத் தொண்டைமான் என்ற பட்டம் அளிப்பது வழக்கம் என்று தெரிகிறது' என்று எழுதினார்கள். அஃதுண்மையே. சாளுக்கிய சோழனை முதலாங் குலோத்துங்கன் காலத்தி லேயே கருணாகரத் தொண்டைமான் என்றொருவனும், கூத் தன் கருணாகரத் தொண்டைமான் என்றொருவனும் உண்டு. முன்னவன் பல்லவ வம்சத்தினன்; பின்னவன் வேளாளன். கூத்தன் கருணாகரத் தொண்டைமானே சிதம்பரம் கல்வெட் டுக்களில் காணப்படுபவன். இவர்கள் கூற்றுப்படியே மூன்றாங் குலோத்துங்கன் காலத்திலும் ஒரு தொண்டைமா னுளன். ஆகவே முதற்குலோத்துங்கன், விக்கிரமன், இரண்டாங் குலோத்துங்கன், இராஜராஜன், இராஜாதிராஜன் மூன்றாங் குலோத்துங்கன் என்னும் ஐவர் தலைமுறை கண்ட ஒரு தொண்டைமான் இருந்தானென்று நிரூபிக்க வேண்டுவது செட்டியாரவர்கள் கடமையாகும்.

ஐந்தாவதாக, சேக்கிழாரடிகள் பிறந்த குன்றத்தூரிலே 'இவ் வூரைச் சேக்கிழாருடன் சம்பந்தப்படுத்த ஆதாரங்கள் இல்லை' என்றும் 'அரசாங்கத்தார் பரிசோதித்து வெளியிட்டதில் இவ்வூ ரில் ஆறு கல்வெட்டுக்கள்மாத்திரம் கிடைத்தன' என்றும் அவை இவையாமென்றும் குறித்தார்கள். இவர்கள் குன்றத்தூரை நேரிற் பார்த்தவர்கள் அல்லவென்று தோன்றுகின்றது. கல் வெட்டிலாகா அறிக்கைகளையும் பிறர் சொல்லியதையும் நம் பியே எழுதி இருக்கின்றனர். இவர்கள் நியாயவாதியாக இருந் தும் தங்கொள்கைக்கு மாறாக அபிப்பிராயங்களோ, சாதனங் களோ இருக்கின்றனவா வென ஆராயாதது மிகவும் வருந்தத் தக்கது. 1929-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 10-ம் தேதி வெளி யான 'ஹிந்து' பத்திரிகையின் கல்வி யனுபந்தத்தில் அவ்வூரில்

மலைக் கோயிலிலும், சிவன் கோயில்களிலும், பெருமாள் கோயிலிலும், சிவன் கோயிலுக்கு எதிரிலுள்ள ஒரு ஸ்தம்பத்திலும், அடுத்த திருநாகேசுரத்திலும் பல கல்வெட்டுக்கள் இருக்கின்றன வென்றெழுதினதோடு சில கல்வெட்டுக்களையும் செந்தமிழில் வெளியிட்டுள்ளேன். பின்னரே கல்வெட்டிலாக்காக்காரர் அவ்வூர் சென்று படியெடுத்து வந்திருக்கின்றனர். ஏறக்குறைய ஐம்பது கல்வெட்டுக்களுக்கு மேல் எடுபட்டிருக்கின்றன வென்றும் 1929-30-ம் ஆண்டு அறிக்கையில் அவை வெளியாகலாமென்றும் தெரிகிறது. 1909-ம் ஆண்டில் கல்வெட் டிலாகாக்காரர் பார்த்த குன்னத்தூர் ஆமூர்க் கோட்டத்து ஆமூர் நாட்டு ஜனநாத நல்லூரான மணமை யாகுமென்பது 1909-ம் ஆண்டு 256-கெ. கல்வெட்டைப் பார்க்க விளங்கும். இக் குன்றத்தூரோ புலியூர்க்கோட்டத்து குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூராகும். முன்னைய குன்னத்தூர் இக் குன்றத்தூருக்குத் தென் கிழக்கில் ஐம்பது கட்டை தூரத்திலுள்ளது. இஃதுண்மைக்கு மாறுயின் செட்டியாரவர்கள் கூறிய மணமையும், மூன்றாங் குலோத்துங்கன் விஜயநகர அரசன் ஸ்ரீ ரங்கராயன் இவர்களுடைய கல்வெட்டுக்களும் சேக்கிழார் பிறந்த குன்றத்தூரிலே இருக்கின்றனவென்று காட்ட வேண்டியது அவர்கள் பொறுப்பாகும்.

குளக்கரையில் ஒரு சிவாலயம் இருப்பதாகக் கூறுகின்றார்கள். குளத்திற்கும் சிவாலயத்திற்கும் ஒரு பர்லாங்கிற்கு மேலிருக்கும் என்று வினயத்துடன் தெரிவித்துக் கொள்கின்றேன். கோயிற் சுவரில் காணப்படும் உருவம் 'அவ் வாலயத்திற்கு உபயம் புரிந்த சந்திரகிரி அரசர் கிருஷ்ணராயரும் அவர் மனைவியும்' என்று அவ் வூரார் சொல்லுவதாகக் கூறுகின்றனர். அவ்வூராருக்கு யான் சென்று காட்டுமளவும் அப்படி யொரு சிற்பமிருப்பதாகவே தெரியாதென்பதை இச்சமயம் தெரிவித்துக் கொள்வதோடு சந்திரகிரியில் கிருஷ்ணதேவ ராயர் வாழ்ந்ததில்லை யென்பது அவர்கட்கும் தெரிந்த தொன்றாம்.

ஆறாவதாக, சேக்கிழார் காலத்தரசன் இரண்டாங் குலோத்துங்கனே என்பது செட்டியாரவர்கள் கொள்கையாகத் தெரிகி

றது. ஒவ்வொரு விஷயத்திலும் அபிப்பிராய பேதங்களுள. இவர்களும் தங்கள் கொள்கையைக் கூறுவதில் ஒருவரும் தடை செய்வதற்கு இல்லை. சேக்கிழாரடிகள் காலத்தைப் பற்றியும் ஆசனைப்பற்றியும் யார் யார் என்னென்ன எழுதி யிருக்கின் றனரென்று விசாரியாமலும், ஆராயாமலும் எழுதியது செட்டி யார் போன்ற படித்தவர்களுக்கு அழகாகாது. நான் ஒருவன் மாத்திரம் இதனைப்பற்றி எழுதினவனல்லன். மகா வித்வான் ரா. ராகவையங்காரவர்கள், டாக்டர் ஹுல்ஷ், கோபிநாதராயர், கே. வி. சுப்பிரமணிய ஐயர் போன்ற பல மேதாவிகள் எழுதி யிருக்கின்றனர். அவற்றையெல்லாம் ஆராயாமல் செட்டியா ரவர்கள் தங்கொள்கையை நிலைநாட்ட முன் வந்ததோடு நில் லாமல் பிறரை ஏளனமாகவும் எழுதிவிட்டார்கள். 'சிற்றம்பலத் திற்கும் பேரம்பலத்திற்கும் உள்ள வேறுபாட்டைக் கவனியாத திரு. சோமசுந்தர தேசிகர்' சொல்லியது தவறு என்றும், 'குலோத்துங்கன் 1-ம், விக்கிரமனும் திருச்சிற்றம்பலத்தைப் பொன்மயமாக்கிய பிறகு குலோத்துங்கன் II அதை வேறொன் றும் செய்ய முடியாமல் பொன்வேய்ந்திராமல் நின்ற பேரம் பலத்தைப் பொன்மய மாக்கியதையே மேல்சொன்ன கல்வெட் டில் குறிக்கப் பெற்றிருக்கிறது' என்றும், இரண்டாங் குலோத் துங்கன் மற்ற திருவீதி முதலியனவும் பொன்மயமாக்கினன் என்றும் எழுதுகிறார்கள். இவர்கள் சொல்வதற்கெல்லாம் ஆதா ரம் கல்வெட்டறிக்கைகளே. இவர்கள் கூறும் பேரம்பலம் பொன்வேய்ந்த செய்தியைக் கல்வெட் டிலாகாக்காரர் பொன் னம்பலமென்றே கொண்டுள்ளார்கள். அவர்களைவிட செட்டி யார்வர்கள் ஒருபடி முன்னேறினர். கல்வெட் டிலாகாகாரர் கூறிய 1894-ம் ஆண்டு 165-நெ. கல்வெட்டை ஆராய்ந்தார்க ளில்லை. அன்றி யான் பத்தாண்டுகட்கு முன்னரே காரைக்குடியி லின்று வெளியாகும் 'குமரனில்' வெளியிட்ட திருமழுவாடிக் கல்வெட்டின் பிரதியைபார்வது கவனித்தார்களில்லை. இரண்டாங் குலோத்துங்கன் தகப்பனன விக்கிரம சோழன் இம் மாநிலங் காக்கத் திருமேனி பொற்மேருட்டெழுது பத்தாண்டு வருதிறை முன்னே மன்னவர் சுமந்து திறை நிறுத்துச் சொரிந்த செம்

பொற்குவையால் தன் குலநாயகம் தாண்டவம் பயிலும் செம் பொன்னம்பலமும் சூழ்திருமாளிகையும் கோபுர வாசல் கூட சாலைகளும் உலகுவலங்கொண் டொளிநேமிக்குலவரை உதைய குன்றமொடு நின்றெனப் பசும்பொன் மேய்ந்ததோடு பீடமும் திருத்தேர்க் கோயிலும் பொன்மேய்ந்தான். ஆகவே பின்வந்த வர்கள் பொன் வேய்வதற்கு இடமேயில்லை யெனலாம். இனி இவர்கள் திருநீற்றுச் சோழன் என்ற பட்டம் இரண்டாங் குலோத்துங்கனுக்கு இருப்பதாகக் கூறுவதற்குரிய ஆதாரம் காட்டினார்களில்லை. இவர்கள் நியாயவாதியாக விரும்தும் சாட் சியம் உண்மையுடையதா வென்று ஆராயாதது மிகவும் வருந்தத் தக்கது. இனி அநபாயன் என்ற பெயர் இரண்டாங் குலோத் துங்கனுக்கே யுரியதென்று கல்வெட்டறிக்கையை நம்பி யெழு தினார்கள். கல்வெட்டறிக்கையை நம்புவது மண் குதிரையை நம்புவதை யொக்குமென்பதை அறியார்களெனக் காண்கிறது அநபாயன் என்ற பெயர் பொதுப் பெயரென்றும் தண்டியலங் கார வுரையிலே எட்டிடத்தில் காட்டப்பட் டுள்ளதென்றும் பல வாண்டுகட்கு முன்னரே கூறியுள்ளேன். இனி திருவாரூர்க் கல்வெட்டிற் காணப்படும் அநபாயன் என்பது இரண்டாங் குலோத்துங்கனைக் குறிக்குமாவெனின் அக் கல்வெட்டிலேயே இரண்டாங் குலோத்துங்கன் பெயர் காணப்படுவதாலும், அக் கல்வெட்டு திருவாரூரில் முதலி மூவர் ஆராதனைக்கு வேண்டு வன நியமித்ததைக் கூறுவதாலும் விளங்கும்.* அவ்வாறு கூறியிராவிடின் இரண்டாம் குலோத்துங்கனது என்று கூற முடிந்திராது. ஆயினும் அநபாயன் என்ற பேரைச் சிறப்பாக இரண்டாங் குலோத்துங்கன் தரித்திருந்தான் என்று காட்ட வேண்டியது நியாயவாதியும் ஆராய்ச்சி வல்லுநருமான செட்டி யாரவர் கடமையாகும்.

———

* இக் கல்வெட்டு செந்தமிழில் வெளியிடப்பட்டுளது.

# சேக்கிழார் மறுமொழி

[திரு. C. M. இராமச்சந்திரஞ் சேட்டியாரவர்கள்]

சேக்கிழார் சுவாமிகளைப்பற்றி நான் செல்வி சிலம்பு 10, பரல் 3-ல் வெளியிட்ட கட்டுரையில் சில ஐயப்பாடுகள் தமக்குத் தோன்றின என்று திரு. சோமசுந்தர தேசிகர் வரைந்திருந்த கட்டுரையை நான் வாசித்தேன். அவர்கள் என் கட்டுரையைச் சிறிது ஊன்றி வாசித்திருந்தால் அவ்வையப்பாடுகள் தோன்றியிரா என எண்ணுகிறேன். என்றாலும், என் கட்டுரையைக் குறித்து அவர்கள் எடுத்துக்கொண்ட சிரமத்திற்காக அவர்களுக்கு என் நன்றியைச் செலுத்துகிறேன். அவ்வையங்களுக்கு அடியிற்கண்டவை மறுமொழியாகும்.

முதலாவது ஐயம் :—சேக்கிழார் அடிகள் திருவிசைப்பாக்காரருள் ஒருவரான கண்டராதித்தர் மகனர் மதுராந்தக உத்தம சோழன் காலத்தவர் என்று செட்டியார் கொண்டதாகக் கூறுகிறார். அவ்விதம் நான் கூறவில்லை. உத்தம சோழன் 969-985-ல் ஆண்டவன். சேக்கிழார் குலோத்துங்கன் II (1123-1146) காலத்தவர் என்றது என் அபிப்பிராயம் என்று தெளிவாகச் சொல்லியிருக்கிறேன். உத்தம சோழனுடைய பெயரைப் பட்டப் பெயராக வைத்துக்கொண்ட வழக்கமும் பின்னால் இயற் பெயராக மாறின வழக்கமும் அந்த உத்தம சோழன் காலமேயன்றி சேக்கிழார் காலத்திலும் அவருக்குப் பின் வந்த கொங்குநாட்டு அரசன் கொங்குச் சோழனான வீர ராஜேந்திரன் (1207-1252) காலத்திலும் இருந்ததாகவே எழுதியுள்ளேன்.

இரண்டாவது ஐயம் :—முத்தூர்ச் சாசனத்து வீர ராஜேந்திரன் கொங்குச் சோழனா என்பதை நிரூபிக்கச் சொல்லுகிறார்கள். முத்தூர் என்ற கிராமம் கொங்கு நாட்டில் மத்திய பாகத்தில் கொங்கு வேளாளர் பிரபலமாக வசிக்கும்படியான காங்கய நாட்டில் உள்ளது. இது காங்கயத்திருந்து கொடுமுடி செல்லும் பாதையில் உள்ளது. கொங்கு நாட்டை 11, 12, 13 நூற்றாண்டுகளில் கொங்குச் சோழர்கள் ஆண்டுவந்தனர். அவர்

களுடைய நூற்றுக் கணக்கான கல்வெட்டுகளைக் கொங்கு நாட்டு ஆலயங்களில் காணலாம். அவர்களில் மிகப் பிரக்யாதி பெற்றவன் வீர ராஜேந்திரன் (1207-1252). இக் கொங்குச் சோழர்களுக்கும் சோழ மன்னர் பரம்பரைக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. இதை விபரமாக அறிய வேண்டுமென்றால் பெங்களூர் மிதிக் ஜர்னல் (Mythic Journal) என்ற பத்திரிகையில் நான் வெளியிட்ட "கொங்கு சரிதத்தில் ஒரு அதிகாரம்" (A chapter in Kongu History) என்ற வியாசத்தைப் படித்து அறிந்துகொள்ளலாம். கொங்கு நாட்டில் சோழ மன்னர்களுடைய சாசனம் அரியது ஆகுமேயன்றி கொங்குச் சோழருடையது அரியதாகாது. ஆகவே நிரூபிக்கும் பொறுப்பு மாறி விடுகிறது.

மூன்றாவது ஐயம் :—கோட்டூர்ப் பாலறுவாயர், திருப்பாம்புரத்துப் பாலறுவாயர், திருத்தருப்பூண்டிப் பாலறுவாயர், இம் மூவரும் சேக்கிழார் அடிகள் தம்பியாரான பாலறுவாயர் என்று நான் கூறினதாக திரு. தேசிகர் கூறுகிறார். இக் கூற்று சரியன்று. பாலறுவாயர் என்ற பெயர்கள் வந்த கல்வெட்டுகளை வரிசையாகக்கூறிக் காலத்தை அனுசரித்தால் அதில் கண்ட காரியங்களை அவர் செய்திருக்கலாம் என்று பொதுவாகச் சொல்லப்பட்டதே ஒழிய முடிவாக அபிப்பிராயம் சொல்லப்படவில்லை.

நான்காவது ஐயம் :—முதற்குலோத்துங்கன் முதல் மூன்றாம் குலோத்துங்கன்வரை ஒரே தொண்டைமான் இருந்தான் என்று என்னைத் தேசிகர் நிரூபிக்கச் சொல்லுகிறார்கள். இவ்விதம் ஒரே தொண்டமான் ஆறு அரசர்கள் காலத்தில் இருந்தான் என்று நான் கூறவில்லை. ஆகவே ஐயமும் ஏற்படவேண்டிய நியாயம் இல்லை. தொண்டைமான் என்ற பட்டங்கள் அல்லது பெயர்கள் வந்த இடங்களையெல்லாம் குறித்து அவைகளிலிருந்து நாம் பெறக்கூடும் கருத்துகளை மாத்திரம் கூறியுள்ளேன். முடிவாகக் குலோத்துங்கன் II குலோத்துங்கன் III இவர்கள் காலங்களில் ஒரு தொண்டைமான் இருந்திருக்கக் கூடும் என்று 136-ம் பக்கத்தில் ஊகித்து எழுதியுள்ளேன். இதில் யாதொரு

அதிசயமும் இல்லை. ஏனெனில் I125 முதல் 1200 வரைக்குள் ஒருவன் ஜீவித்திருக்க முடியும்.

ஐந்தாவது ஐயம்:—குன்றத்தூரின் பல விவரங்களும் அங்கு ஒவ்வொன்றிற்கும் உள்ள தூரங்களையும் நான் கவனித்து எழுதவில்லை என்பதும் திரு. தேசிகர் வெளியிட்ட பல வியாசங்களையும் நான் கண்டு எழுதவில்லை என்பதும் குறைகளாகக் கூறுகின்றனர். இவைகளை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். திரு. தேசிகர் அவர்களை நேரில் நான் அறியேன். அவரது புலமை நிரம்பிய வியாசங்களையும் அறிந்தவனல்லன். அவர்கள் வெளியிட்டுள்ள கட்டுரைகளை எனக்கு அனுப்பியிருந்தால் அவைகளைக் கண்டு நான் என் புல்லறிவை விலாசப் படுத்திக்கொண்டிருப்பேன். ஒரு பர்லாங்கு தூரம் என்பது ஒரு பெரியது என்று நான் எண்ணவில்லை. அரசாங்கத்தார் குன்றத்தூரில் இல்லாதவற்றைக் குன்றத்தூர் என்று பதிப்பித்திருந்தால் அது அவர்கள் தப்பாகும். நான் குன்றத்தூரைப் பார்த்தவனோ அல்லனோ என்பதற்கு அடுத்த இதழில் வெளிவரும் குன்றத்தூர்ப் பாடல்களைத் தேசிகர் நோக்குவாராக.

ஆறுவது ஐயம்:—பொன் வேய்ந்ததைப் பற்றியது செல்வி 140, 141 பக்கங்களை ஊன்றி வாசித்தால் இவ்வையம் மாயமாகிவிடும். நான் "மண் குதிரை"யாகிய கல்வெட்டுகளைக் கொண்டே ஆராய்ச்சியாகிய "ஆற்றில்" இறங்கினதாகத் தேசிகர் எண்ணுகிறார்கள். அம்மண் குதிரைகள் கரைந்து போகாதபடி சூளையில் வைத்துக் காய்ச்சின நெருப்பாகிய சேக்கிழார் அடிகளது திருப்பாசுரங்கள்தாம் எனக்குத் தகுந்த பலமாக இருந்தன என்பதைத் திரு. தேசிகர் அறியவேண்டும். சேக்கிழார் காலத்து சோழன் பேரம்பலம், தில்லைத் திருவெல்லை, தில்லை வீதி இம் மூன்றிற்கும் திருப்பணி செய்தான் என்று சேக்கிழாரே சொல்லுகிறார். திருப்புறம்பியச் சாசனத்திலும் பேரம்பலம் பொன் வேய்ந்ததே கண்டிருக்கிறது. குலோத்துங்கன் I-ம் விக்கிரமனும் சிற்றம்பலத்தைப் பொன்வேய குலோத்துங்கன்-II எஞ்சி நின்ற பேரம்பலத்தைப் பொன் வேய்ந்தான். இனியும் மற்ற திருப்பணிகளையும் செய்தான். காய்ச்சின மண்

குதிரையின் உருவத்திற்கு அழியாத எண்ணைச் சாயம் பூசு கிறாற்போல் 'மூவருலா'வில் ஒட்டக்கூத்தரும் சிறந்த அடை மொழிகளைக் குறித்துள்ளார். இராஜராஜ சோழனுலாவில் சிற்றம்பலம் பேரம்பலம் என்று தனித் தனியாகக் கூறி அவை களுக்கு குலோத்துங்கன் II பொன் வேய்ந்ததாகக் கூறியுள் ளார். ஆகவே இதனால் பேரம்பலம் மாத்திரமே யன்றித் தன் மூத்தோர் இட்ட பொன் சிறிது மங்கிப்போக அதனைத் தானும் புதுப்பித்தான் என ஊகிக்கலாம். இவைகளை எல்லாம் ஆராய்ந் தால் சேக்கிழாரை இராஜேந்திரன் காலத்திற்குக் கொண்டு போக முடியாது என்றே தோன்றுகிறது.

மேலும் முந்தி எழுதாத மற்றொரு குறிப்பு ஒன்று தெரி கிறது. மூவர் உலாவில் குலோத்துங்கன் உலாவில் தில்லையில் இருந்த சிறு தெய்வமான விஷ்ணு விக்கிரகம் ஒன்றை வெளி யேற்றினது அவன் பிரபாவத்தில் ஒன்றாகக் குறிக்கப்பட் டுள்ளது. இதனால் இக்குலோத்துங்கன் II எத்துணை பரம சைவனாக இருந்திருத்தல் வேண்டும் என்று காண்கிறோம். அவனே சேக்கிழாரை ஆதரித்தவனாக இருத்தல் வேண்டும். திரு. தேசிகர் கூற்றுகள் எல்லாம் எதிர்மறைக் கூற்றுகளாக இருக்கின்றனவே யன்றி உடன்பாட்டுக் கூற்றுகளை அவர் எடுத்தாளவில்லை. இவ்வித ஆராய்ச்சி தர்க்க சாஸ்திரத்துக்கு முழுதும் பொருத்த மானதன்று.

இனி கடைசியாக, திரு. தேசிகர் என்மீது வீசிய சில ஈட் டிக் குத்துகள் அவருடைய படிப்பிற்கும் பெருந்தன்மைக்கும் அழகல்ல. சில நாட்களுக்கு முன்னிருந்த அறிவிலாத சில பண்டிதர்களைப் போன்று அபிப்பிராய பேதங்களுக் கெல்லாம் விபரீத கண்டனைகள் செய்வது தர்மமன்று. "நியாய வாதியாக இருந்தும் ஆதாரங்களை ஆராய்ந்தவரல்லர்" "விசாரியாமலும் ஆராயாமலும் எழுதினார்" "ஒரு படி முன்னேறினார்" "ஏள னம் செய்கிறார்" முதலான வார்த்தைகளைப் பிரயோகிப்பது பெருந்தன்மைக்கு அழகன்று. இதனைப் பெருக்குவதற்கு எனக்கு இஷ்டம் இல்லை. அது பழக்கத்தின்பால் பட்டது என விடுத்தேன். இனி மேலாவது திரு. தேசிகர் அவர்கள்

ஆராய்ச்சிகள் எல்லாம் தமிழ்மக்களின் உயர்வைக் காட்டும் பரோபகாரத்திற்காகவே யன்றி அவரவர்கள் ஏற்றத் தாழ்ச்சிக்காக அல்ல என்று அறிந்து கொள்வாராக.

குறிப்பு:—என் கட்டுரையையும் தேசிகர் மறுப்பினையும் ஆராய்ச்சியில் வல்லுனரும் சாளுக்கிய விக்கிரமாதித்தன் சரித்திரம் எழுதினாரும் ஆகிய திரு. A. V. வெங்கிடராமையர் அவர்களுக்குக் காட்டினேன். அவர்களும் என் முடிவுகளை ஒத்துக்கொண்டார்கள்.

ம. ரா.

---

# இலக்கணவுரை வழூக்கள்

[திரு. வித்வான் G. தேவநேசன் அவர்கள்]

(சிலம்பு ம, பரல் க, உச-ம் பக்கத் தொடர்ச்சி)

1. இடுகுறிப் பெயர்:—'அ, ஆ என்றற் றொடக்கத்தன, இடுகுறிச் சிறப்புப் பெயர்' என்பது நன்னூற் பழையவுரை.

அ, ஆ என்பவை எழுத்துக்களே யன்றி அவற்றின் பெயர்களாகா. எழுத்தாவது ஒலி. ஒரு பொருள் வேறு அதன் பெயர் வேறு. குடம் என்பது ஒரு பொருள். அப் பொருள் வேறு; அதைக் குறிக்கும் குடம் என்னும் சொல் வேறு. அ, ஆ என்பவை எழுத்துக்களாகிய பொருள்கள். உயிர், குறில், நெடில் என்பனவே அவற்றின் பெயர்கள். ஒரு பொருள் பெயரின்றியும் யாதானுமோர் புலனுகச் சுட்டப்படும். அ, ஆ என்பவை பெயர்களாயின் அவற்றாற் குறிக்கப்படும் பொருள்கள் அவையன்றி வேறுதல் வேண்டும். அங்ஙனமின்மையின் அஃதுரை யன்மை யறிக.

அன்றியும் இடுகுறியென்றோர் பெயர் யாண்டுமிலது. "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே".

"மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா"

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

அற்றேல், மக்கட்கிடும் இயற்பெயர்களோவெனின், அவையும் முதலாவது இடப்படும்போது காரணப் பெயர்களாகவேயிருந்திருத்தல் வேண்டும். (உ-ம். முருகன்=இளைஞன். Victor=வெற்றி பெற்றவன்) பின்னரும் அவை, தெய்வப் பற்று, அதிகாரிமாட்டன்பு, இனமுறை, இன்னோசை, விழுமிய பொருள், உயர்நோக்கம் என்பவற்றுள் ஒன்றுபற்றியே மக்கட்கிடப்பட்டு வருகின்றன.

மக்கட்கிடப்படும் இயற்பெயரெல்லாம் முதலாவது பொருள் குறித்தனவென்றும், பின்பு மக்கட்பன்மையால் மகன்றோறும் புதுப்பெயரிடுத லருமைபற்றிப் பழம் பெயர்களே மீண்டும் மீண்டும் பிறர்க்கிடப்படுகின்றன வென்றும் பெயின் (Bain) என்னும் ஆங்கிலப்புலவர் தம் இலக்கணத்திற் கூறியுள்ளார்.

இடுகுறிப் பெயருண்டென்னும் இழுக்குணர்ச்சியே சிலர் தவற்றாராய்ச்சிக்கும் காரணமாயிருந்து வருகின்றது.

தாவரங்களுள் இடுகுறிப்பெயருடையவை யெல்லாம் தமிழ் நாட்டிற்குரியவென்றும், காரணப் பெயருடையவையெல்லாம் அயல் நாட்டிற்குரிய வென்றும், வெற்றிலை (வெறுமை + இலை) மிளகாய் (மிளகு + காய்) முதலியவை காரணப் பெயருடைமையால் அயல் நாட்டினின்று வந்தவையென்றும், வாழை, வேம்பு முதலியவை இடுகுறிப்பெயருடைமையால் தமிழ் நாட்டிற்குரிய வென்றும், 'இயற்கைப் பொருட் கட்டுரை' என்னும் நூலிற் கூறப்பட்டுள்ளது.

ஒவ்வொரு பொருளுக்கும் தனிமொழியாயும் தொடர் மொழியாயும் ஒன்றும் பலவும் பெயரிருக்கு மென்றும், சொற்கள் தோன்றி ஊழிக்கணக்கான காலங்களாகியிருத்தலின் அவற்றுட் பலவற்றின் பொருள்கள் இறந்தும் மறைந்தும் இருக்கின்றன வென்றும், வெற்றிலைக்கு 'அடை' என்ற மறுபெயர் பண்டை நூல்களிற் கூறப்பட்டுள்ளதென்றும், அவரை யினத்தைச் சேர்ந்த காய் கொத்தவரை யென்னப்பட்டாற்போல, மிளகினத்தைச் சேர்ந்த காய் மிளகாயென்னப் பட்டதென்றும்,

வழவழ வென்றிருப்பது வாழையென்றும், வெம்மையான காலத்தில் தழைப்பது வேம்பு என்றும் அந்நூலாசிரியர் அறிந்திலர் போலும்!

இக்காலத்திற் சிலர் ஆங்கிலமுணர்ந்த மாத்திரையானே தமிழு முணர்ந்தமென்று தமிழாராயத் தொடங்குகின்றனர். அது நால்வர் கண்ணிலார் நால்வாய் கண்ட தொக்கும்.

இதுகாறும் கூறியவற்றை 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்னும் உத்தியாற்கொள்க.

2. போலி:—(நன் சூ. 122 உரை.)

"முதற்போலி இடைப்போலிகளின்பின் முறையே சொல்ல வேண்டிய இவ்விறுதிப் போலியை முன்னே சொன்னதனால், சுரும்பு—சுரும்பர், வண்டு—வண்டர், சிறகு—சிறகர், இடக்கு—இடக்கர் எனச் சில குற்றியலுகரப் பெயரினிறுதி உகரத்துக்கு 'அவர் என்பது போலியாக வருதலும்... ........கொள்க" என்பது.

கடைப் போலியின் சிறப்புப்பற்றியும் அதன் பெரு வழக்குப் பற்றியுமே அது முதலிற் கூறப்பட்டது. அது ஒருகால் ஒன்றைக்குறிப்பினும், பந்தல்—பந்தர், குடல்—குடர் போன்ற போலிகளே கொள்ளப்படுமல்லது வண்டு—வண்டர், சிறகு—சிறகர் என்பவை கொள்ளப்படா.

குற்றியலுகரங்கள் மிகக்குறுகிய ஓசையுடையனவாய்ச் சொல்லுக் கிறுதியிலிருப்பது உச்சரிப்பிற் கெளிதாயிராமை பற்றி அவற்றை (நீட்டி) எளிதாக்குவதற்கு அம், அல், அர், இ முதலிய சாரியைகள் வருவதுண்டு. அவை போலியாகா. அர் என்பது போலியாயின் ஏனையவும் போலியாதல் வேண்டும். அவை சாரியையாதலின் அஃது போலியுரையென மறுக்க.

உ-ம்.

| | |
|---|---|
| குன்று—குன்றம் | சுக்கு—சுக்கல் |
| நெஞ்சு—நெஞ்சம் | |
| இடக்கு—இடக்கர் | குச்சு—குச்சி |
| வண்டு—வண்டர் | குஞ்சு—குஞ்சி |

'அர்' என்பது சாரியையாக நூல்களிற் கூறப்படவில்லை. ஆயினும், அது சாரியை யென்றே கொள்ளற்பாற்று. 'அல்' என்பதன் ஈற்றுப்போலி எனினும் அமையும்.

இனி, "பித்து—பிச்சு, வைத்த—வைச்ச எனத் தகாரத்துக்குச் சகரம் போலியாக வருதலும் அடங்கும் வழியறிந்து அமைத்துக்கொள்க" என்பது மேற் சூத்திர முடிவுரையாகும்.

பிச்சு, வைச்ச என்பவை செய்யுள் விகாரமேயன்றிப் போலியாகா. அவை போலியாயின் கொச்சை (Barbarism) யென்பதொன்றின்றிக் கல்லா மாக்கள் பேசுவதெல்லாம் போலியுளடங்கு மென்றும்,

"ஆச்சென்று லாயிரம் பாட்டாகாதா"
"ஆப்பிட்டுக்கொண் டடிபட்ட சொக்கேசருக் காசைப்பட்டு"

என்னும் செய்யுளடிகளிலுள்ள 'ஆச்சு' 'ஆப்பிட்டு' என்பவும் உலக வழக்கில் திருந்திய மொழிகளாகுமென்றும் மறுக்க.

3. பதவியல்:—நன்னூற் பதவிய லுரைமுகத்தில்,

"இவ்வியலுக்கு ஆதாரம் பெரும்பாலும் வடமொழியாதலால் அது தோன்ற 'மொழியியல்' எனப் பெயர் குறியாமல் 'பதவியல்' எனப்பெயர் குறித்தார் போலும்" என்று ஆசிரியர் கருத்தை ஒருவாறு ஊடுருவி யறிந்தாற்போற் கூறப்பட்டுள்ளது.

தொல்காப்பியத்திற் பதவிய லென்றோர் இயலில் பகுபத உறுப்புக்களெல்லாம் தொகுத்துக் கூறப்படாவிடினும் எழுத்ததிகாரம் சொல்லதிகாரமென்னு மீரதிகாரங்களிலும் ஆங்காங்கு வேறு வேறு கூறப்பட்டுள்ளன.

பகுதியும் விகுதியும் பெயரியல் வினையியல் இடையியல்களுள்ளும், சாரியையும் விகாரமும் புணரியல்களுள்ளும், இடைநிலையொன்றும் புணரியல் இடையியல்களுள்ளும் தொல்காப்பியத்திற் கூறப்பட்டுள்ளமை காண்க.

தொல்காப்பியக் காலத்து மக்கள் நுண்ணறிவினராதலின், அவர்க்குப் பலவியல்களுள்ளும் வேறு வேறு கூறப்பட்டுள்ள

பகுபத வுறுப்புக்களை மீண்டுமோரியலில் தொகுத்துக் கூற வேண்டாதாயிற்று. நன்னூற் காலத்தில் மக்களறிவு குறைந்தமையின் அவற்றைத் தொகுத்துக் கூறவும் வேண்டியதாயிற்று. தொல்காப்பியத்திற் கூறப்படாத பகுபத விலக்கணத்தை வடமொழி தழுவிப் புதிதாய்ச் செய்தார் பவணந்தியாரெனின், அவர் காலம் வரையும் தமிழானது ஆங்கிலம்போலப் பதவியன் மொழியா யிருந்திலதெனவும், அவரது நன்னூலாலேயே வடமொழிபோலப் பதவியன் மொழியாயிற்றெனவும் இயற்கைக்கும் மொழிநூலுக்கும் முரண்படுமன்றோ? ஆதலால் தொல்காப்பியர் காலத்திலேயே பகுபத விலக்கண மிருந்ததென்றும், அது தொல்காப்பியத்தில் ஆங்காங்கு கூறப்பட்டுள்ளதென்றும், அதை மறுத்து மோரியலில் தொகுத்துக்கூறுவது அற்றைமுறைப்படி கூறியதுகூறலென்னுங் குற்றமாகுமென்றும் உய்த்துணர்ந்து கொள்க.

4. திசைச்சொல் :—திசைச் சொல்லானது பன்னிரு கொடுந்தமிழ் நாட்டினின்றும் வந்து செந்தமிழில் வழங்கும் கொடுந்தமிழ்ச் சொற்களேயன்றிப் பிறமொழிச் சொற்களாகா.

"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி"

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். அதை யுணராது

"செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினில் தமிழொழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி"

என்று பதினெண்மொழி நிலங்களையும் கூட்டி யுரைத்தார் பவணந்தியார்.

சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியரெல்லாம் கொடுந்தமிழ்ச் சொற்களையே திசைச்சொற்கு உதாரணங் காட்டினர். தெலுங்கு, கன்னடம் மலையாளம் முதலிய மொழிகளெல்லாம் பண்டைக் கொடுந்தமிழ்களாதலின் திசைச் சொற்குதாரணங் காட்டப்பட்டன. வடமொழி யொன்றே தொல்காப்பியர் காலத்து இந்து தேசத்தில் வழங்

கின பிறமொழியாகும். அது திசைச் சொல்லினின்றும் பிரிக்கப்பட்டு வடசொல்லென விதந்து கூறப்பட்டது. இதனால் கொடுந்தமிழ்ச் சொற்களே திசைச் சொற்களென்றும் பிற மொழிகளெல்லாம் வடசொற்போல அவ்வம்மொழிப் பெயராலேயே குறிக்கப்படுமென்றும், அவை திசைச்சொல்லுளடங்காவென்றும் பெறப்படுமாறு காண்க. இங்கிலீஷ், இந்துஸ்தானி, போர்த்துக்கீஸ் முதலிய பிறமொழிச் சொற்களை யெல்லாம் திசைச்சொல்லாக இற்றைச் சிற்றிலக்கணங்கள் கூறுநிற்கும். அவற்றை ஆங்கிலச்சொல், இந்துஸ்தானிச்சொல், போர்த்துக்கீசியச்சொல் என அவ்வம்மொழிப் பெயராலேயே குறித்தல் வேண்டும். இவை அக்காலத்தின்மையின் தொல்காப்பியத்திற் கூறப்பட்டில. பிறமொழிச் சொற்களை யெல்லாம் தாராளமாய்த் தமிழில் வழங்குமாறு திசைச்சொல்லாக்கொள்ள இலக்கணிகள் இடந்தந்தாராயின், ஏராளமான பிறமொழிச் சொற்கள் யாதும் வரம்பின்றித் தமிழிற் கலந்து அதன் இனிமையையும் தனிமையையும் குலைத்து விடுதல் திண்ணம். அதோடு அவை தமிழுக்கு இன்றியமையாதவை யென்றும், அவையின்றித் தமிழில் முற்றப் பொருளறிவுறுத்தலமையா தென்றும், எண்ணப்படும். ஆதலின் இலக்கணிகள் இடந்தந்திலர். இங்கிலீஷ் போன்ற மொழிகட்கே திசைச்சொற்கள் இன்றியமையாதவையாகும். தமிழிலிருந்த எத்துணையோ சொற்கள் வழக்கின்றி இறந்தொழிந்தன. ஆயினும் இற்றைக்காலத்தும், பிற சொற் கலவாது கருத்தெல்லாவற்றையும் உணர்த்தவல்லது தமிழ் ஒன்றேயாகும். ஆங்கிலத்தை வடமொழி யுதவியின்றித் தமிழில் மொழிபெயர்க்க முடியாதென்று சிலர் கருதுகின்றனர். மூலப்பகுதிகளினின்றும் இயற்சொற்களினின்றும் திரிசொற்களும் தொடர்ச்சொற்களும் ஆக்குமாறு அவரறிந்தாராயின் அங்ஙனம் கருதார். ஒவ்வொரு மொழியினும் பிறமொழியைச் செவ்வையாய் மொழி பெயர்ப்பது அரிதாகும். ஆயினும் தமிழில் ஏனையவற்றிற்போல அத்துணை அரிதன்று. இதுபோது நூல் வழக்கினும் உலக வழக்கினுமுள்ள தமிழ்ச் சொற்களையே தமிழ் மக்கள் அறிந்திலர்.

தமிழுக்கு வடமொழி யுதவி வேண்டாதிருக்க, வடசொல்லை யேன் தமிழிலக்கணங் கூறவேண்டுமெனின், வடமொழி தமிழுக்கு இடத்தால் அணித்தாதலின் போக்குவரவு பற்றியும் மொழிபெயர்ப்புப்பற்றியும் வடமொழியிலுள்ள நூற்பெயர்களும் ஆட்பெயர்களுமாய்த் தமிழில் வந்து வழங்கிய சிறப்புப் பெயர்களே வடசொல்லெனப் பட்டனவென்றும், மொழி வழக்கிற்கும் கருத்தறிவிப்பிற்கும் வேண்டிய பிற பொதுச்சொற்கள் தமிழில் வந்து வழங்குமாறு கூறப்பட்டில வென்றும் பண்டை நூல்களெல்லாம் வடமொழி விரவாத செந்தமிழ் நூல்களென்றும் கூறிவிடுக்க.

செந்தமிழ் சேர்ந்த பன்னிருநிலத்தும்
...............திசைச்சொல்"

எனவே, செந்தமிழ் நாட்டை நாற்றிசையும் சூழ்ந்த பன்னிரு கொடுந் தமிழ்நாடுகளினின்று வந்தும் வழங்கும் கொடுந் தமிழ்ச் சொற்களே திசைச் சொற்களென்றும், பிறமொழிச் சொற்கள் தமிழுக்கு வேண்டுவ வல்லவென்றும், ஒருகால் வேண்டினும், வடசொற்போல அவ்வம்மொழியாற் குறிக்கப் படுமென்றும், அறிந்து கொள்க.

5. எதிர்மறையும்மை:—"சாத்தன் வருதற்கு முரியன் என்பது வாராமைக்கு முரியன் என்னும் எதிர்மறையை ஒழிபாக வுடைத்தாய் நிற்றலின், எதிர்மறையும்மை" என்றார் சேனாவரையர்.

அதையே, "சாத்தன் வருதற்கு முரியன் என்பது வாராமைக்கும் உரியனென எதிர்மறையை ஒழிபாக உடைத்தாய் நிற்றலின், எதிர்மறை. இஃது "அஃறிணைவிரவுப் பெயரியல்பு மாருளவே" எனப் பண்பு பற்றியும் வரும். இது பிறிதோர் பொருளைத் தழுவாது ஒரு பொருளின் வினையை மறுத்து நிற்றலின் எச்சத்தின் வேறாயிற்று. மேல் ஆசிரியர் "எதிர் மறை எச்சம்" என்றமையின் இஃது எச்சத்தின் கூறாகும்" என்று விரித்துக் கூறினர் நச்சினார்க்கினியர்.

இதே உதாரணத்தை ஏனைச்சிற்றிலக்கணத்தா ரெல்லாரும் வழிவழி காட்டி வந்தனர்.

சாத்தன் வருதற்கு முரியன் என்பது வாராமைக்கு முரிய னென்பதைத் தழுவி நிற்றலின், அது ஏனையதுதழீஇய எச்ச வும்மையன்றி எதிர்மறையும்மை யாகாது. அது பிறிதொரு பொருளைத் தழுவாவிடினும் பிறிதொரு வினையைத் தழுவி நிற்குமாறறிக. சாத்தன் வருதற்கு முரியன் என்பது எதிர் மறை யும்மையாயின், சாத்தன் வாராமைக்கு முரியன் என்பது உடன்பாட்டும்மை யாதல் வேண்டும், உடன்பாட்டை ஒழிபா யுடைத்தாய் நிற்றலின். அவ்வாறு உடன்பாட்டும்மை சூத்தி ரத்திற் கூறப்படாமையின் அஃதுரையன்மை யறிக. பின்னை யாதோதான் எதிர்மறையும்மை யெனின், நாள் தவறினும் நாத் தவறான் என்புழி நாள் தவறினும் என்பது தவறாது என்னும் ஒழிபை உடைத்தாய் நிற்றலின் அதுவே எதிர்மறையும்மை யென்க. கடல் வற்றினுங் கங்கை வற்றாது, தெய்வம் தீமை செய் யினும் கொற்றன் தீமை செய்யான் என்பனவும் இவை போன்ற பிறவு மதற்குதாரணம்.

---

# தமிழ் அறிவியற் சொற்கள்

## Geometry — வடிவளவை

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர்-காழி. சிவ. கண்ணுசாமி B.A.]

(௨௧௬-வது பக்கத் தொடர்ச்சி)

To intercept என்பதற்கு இடையிற் பிடிக்க என்பது நேர்பொருள். வடிவளவையில் இரண்டு குற்றுகளுக்கு இடையிற் பட்ட ஒரு வரை என்று அது பொருள்படும்.

---

*சென்ற நான்காவது, ஐந்தாவது பாலின்கண் வந்த Geometry என்ற தலைப்பிரண்டிற்கும் வடிவளவை என்றே பொருளைத் திருத்தி யமைத்துக் கொள்க.

எனவே The Intercept அல்லது Interception என்பதற்கு இடைப் பிடிப்பு என்பது பொருளாகும்.

எடுத்துக் காட்டு:—(A line crosses two parallel lines at half a right angle and the intercept of this line between the parallel lines is two feet) இரண்டு ஒரு போகு வரைகளை மற்றொரு வரை அரை செம்முடக்காகக் குறுக்கிடுகின்றது; இதன் இடைப்பிடிப்பு இரண்டு அடிகள்.

Distance தொலை.

Join K. P, is கா. பா. இடைவரையைக் சேர் or சேர்த்து. இவ்வாறு பொருள்கூருமல் நேராக கா அல்லது பா என்ற குற்றை அலைதொழிந்த மற்றொரு குற்றோடு சேர் என்று பொருள் கூறுதல் பொருந்தாது; ஏனெனில் அது ஒரு குற்றை நகர்த்திக்கொண்டு போய் மற்றொரு குற்றோடு சேர் என்னும் மயக்கப் பொருளை யளிக்குமாகலின்.

Produce K, P. கா, பா-வை நீட்டு. இங்கே கா. பா என்பது அவ்விரண்டிற்கும் இடையுள்ள வரையையே குறிக்கிறது.

Extremities — நுனிகள்
Extremities of a line — வரையின் நுனிகள், (வரை நுனிகள்.

| | |
|---|---|
| Describe a circle | வட்டத்தை வீத்து, வட்டம் வீத்து |
| Draw a line | வரையை யிழு, வரையிழு |
| Draw a curve | நெளியை யிழு, நெளியிழு |
| Describe a curve | நெளியை வீத்து, நெளி வீத்து |
| Superpose | மேற்பொருத்து, மேலமை |
| Coincide | பொருந்த, அமைய |

(If K. P. T. is superposed over L. R. M. they do not coincide) கா. பா. டா வை லா. ரா. மா மேற் பொருத்தினல் பொருந்தவில்லை (அமையவில்லை).

Meter மட்டு

இஃது "கிணறு நான்கு மட்டு வெட்டினுன்" என்ற வழக்காற்றிலிருந்து பெறப்பட்டதாகும்.

Thermometer　வெப்பமட்டு

Barometer என்பதற்கு நேர்பொருள் நிறைமட்டு என்பதாகும்; ஏனெனில் Barometer என்பது நிறையின் அளவு என்றே பொருள்படும். ஆயினும் அது வளியின் நிறையளவு என்றே வழங்கி வருகிறதாகலின் நிறைமட்டு என்று தொகுத்தும் வளிநிறைமட்டு என்று விரித்தும் அது பொருள் கோடற் குரித்தாம். எனவே,

Barometer　வளிநிறைமட்டு
Speedometer　விரைவுமட்டு
Lactometer　பால்மட்டு

பிறவுமின்ன.

Geometry என்னும் சொற்கு நேர்பொருள் நிலத்தின் அளவைக் கணிப்பது என்பதாகும்; ஆனல் வழக்காற்றிலேயோ அது வரைவடிவுகளின் அளவையே குறிக்கிறது; எனவே வடிவளவை நூல் என்று அதனைத் தமிழிற்கோடலே ஏற்புடைத்தாம்.

வடிவளவை நூல் என்பதிலுள்ள நூல் என்னும் சொல்லையும் நீக்கி வடிவளவை என்றே குறிப்பது சாலச் சிறந்ததாகும்; என்னே, நூலளவானேயன்றி மக்கள் தம் உள்ளத்தளவிலேயே எழுதா நூலாகக் கிடப்பினும் அது வடிவளவையேயாகுமாதலின்.

Geometry　வடிவளவை.
Plane　தட்டை (பண்பு), தட்டு (பெயர்).
Plane figures　தட்டை வடிவங்கள்.
Plane geometry　தட்டை வடிவளவை நூல், தட்டை வடிவளவை, தட்டையளவை.
Solid　கட்டி
Solid Geometry　கட்டி யளவைநூல், கட்டியளவை.
Trignometry　என்பதற்கு மும்முடக்கியின் அளவைக்

குறித்த நூல் என்பதே நேர்பொருளாயினும் அது வழக்காற்றில் எல்லாவரை வடிவங்களிலுள்ள முடக்குகளையுங் குறித்து நிற்றலின் முடக்களவை நூல் அல்லது முடக்களவை யெனக் கோடலே நன்றாகும்.

| | |
|---|---|
| Plane Trignometry | தட்டை முடக்களவை |
| Spherical Trignometry | வளைவு முடக்களவை |
| Cylinder | வட்ட உருளை |
| cylindrical | வட்ட உருளையான |
| prism | பட்டை யுருளை |
| prismoid | பட்டையுருளையான வடிவு |
| Axis | இருசு |
| Axis of Cylinder | வட்ட உருளை யிருசு |
| Cone | கூம்பு, வட்டக் கூம்பு |
| Point or vertex or apex of a cone | கூம்புச்சி, வட்டக் கூம்புச்சி |
| Pyramid | பட்டைக் கூம்பு |
| Pyramidal | பட்டைக் கூப்பான |
| Solid cylinder | கெட்டியுருளை |
| Hollow cylinder | பொல்லுருளை |
| Solid cone | கெட்டிக்கூம்பு, கெட்டி வட்டக் கூம்பு. |
| Hollow cone | பொற்கூம்பு, பொல்லுக்கூம்பு |
| Face of a solid | கட்டியின் பட்டை |
| Hexa hedron or Six faced solid | ஆறுபட்டைக் கட்டி |
| Tetra hedron | நான்குபட்டைக் கட்டி |
| Tetra hexa hedron | இருபத்துநான்குபட்டை கட்டி |
| Dodeca hedron | பன்னிருபட்டைக் கட்டி |
| Regular tetra hedron | முறைநான்கு பட்டைக் கட்டி |

என இவ்வாறே ஏனைய முறையான கட்டிகட்கும்.

| | |
|---|---|
| Regular solid | முறைக் கட்டி |
| Cube or Regular hexa hedron | முறையாறுபட்டைக் கட்டி |

Cuboid　　போலியாறுபட்டைக் கட்டி
Cuboidal　　ஆறுபட்டைக் கட்டி போலிய

Cubical என்பது பருமையளவு குறித்தே வழங்கப்படுகிறது; முறையாறுபட்டைக் கட்டியைக் குறித்து அது வழங்கப் படுவதில்லை.

Length　　நீட்டம், நீளம்
Lineal measure　　நீட்டளவு, நீட்டலளவு
Area　　பரப்பு
Square or Superficial measure　　பரப்பளவு
Volume　　பருமன், பருமை
Cubical or Volumetric measure　　பருமளவு
Development (of a solid)　　பிரித்துப் பரப்பல்
Developing a cube　　ஆறுபட்டைக் கட்டியைப் பிரித்துப் பரப்பல்

Boundary　　எல்கை, எல்லை
Boundaries of an area　　பரப்பின் எல்லைகள்
Capacity　　கொள்ளிடம்
What is the capacity of this Cone? இந்தக் கூம்பின் கொள்ளிடம் என்ன?

Construct　　அமை, ஆக்கு, கட்டு
என்றவற்றுள் ஆக்கு என்பதே சிறந்தது.

"Construct an equilateral triangle with each side equal to 2 feet"—ஒவ்வொரு சிறையும் இரண்டடியுள்ள ஒரு சரிசிறை மும்முடக்கியை யாக்கு.

"Construct a regular tetra hedron with its altitude equal to 3 feet"—மூன்றடி யுயரமுள்ள ஒரு முறை நாற்பட்டைக் கட்டியை யாக்கு.

Section　　வெட்டு, வெட்டுமுகம்
Conic section　　கூம்புவெட்டு, கூம்புவெட்டுமுகம்
Ellipse (or an oblique projection of a circle)

ஓராய வட்டம், ஓாண்டை வட்டம், ஓரை வட்டம், வட்டத் தோரை, வட்டவோரை.

வட்டவோரை என்பதற்கு நேர்பொருள் ஒரு வட்டத்தின் சாய்வு என்பதே; அப்பொருள் வடிவளவைப் படியும் ஏற்றதாகும். அன்றியும் ஒரு வட்ட உருளையின் சாய்ந்த வெட்டு முகத்தைக் குறிக்கும்போதும் Ellipse என்பது வடிவளவைப்படி ஒரு வட்டத்தின் சாய்ந்த ஓரையையே குறிக்கும். ஆகவே ஆண்டும் வட்டவோரை என்ற சொல்லே பொருத்தமான தொன்றாகும்.

கூம்புப் பகுதிகளைப் பற்றி மேலெழுதுவதற்குமுன் finite, infinite என்ற சொற்களுக்குப் பொருளமைத்துக் கோடல் இன்றியமையாததாகின்றது; ஏனெனில் ஒரு கூம்பின் Ellipse அதன் finite வெட்டுமுகமும் Parabola அதன் பாதி finite, பாதி infinite வெட்டு முகமும், Hyperbola அதன் infinite வெட்டுமுகமுமாகலான்.

தமிழின் தொன்மையான நூலாகக் கருதப்படும் தொல்காப்பியத்தில் முதலீறில்லாத முப்பொருள்களைக் குறிக்குமிடங்களில் "கந்தழி" என்ற ஒரு சொல் பெரிதும் எடுத்தாளப்பட்டு வருகிறது.

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

என்பது தொல்காப்பியச் சூத்திரம். அளவை நூல்களால் Infinite அல்லது Nullity என்னும் சொற்களுக்கு ஒருவாறு உண்மைப் பொருள் காண்பது என்பது முடியுமானல் அது கணக்களவைப் பகுதியினல்தான் முடியும். அப்பகுதி யொன்றில்தான் Finiteness, Infinity, Nullity என்பன முழு உறுப்புக்களாக எடுத்தாளப்படுகின்றன. இவ்வுறுப்புக்களின்றி கணக்களவை நூல் முற்ற முடிந்த தொன்றாகாது. பண்டைத் தமிழரின் முப்பொருளுண்மைக் கொள்கைகள் தமிழ் மொழியின் ஒவ்வொரு கூற்றிலும் விரவியிருத்தலான் அவர்கள் எடுத்

தாண்ட "கந்தழி" யென்ற சொல்லை நாமுந்தேர்ந்து கோடல் ஏற்புடைத்தாம். அவ்வாறு செய்தல் தமிழ்மொழியின் ஒப்பரிய உண்மைத் தத்துவத்தை யெடுத்துக் காட்டுவதாகும் என்பது ஒருபுறமிருக்க, அச்சொல்லைப்போல் சொல்லாக்கத்தில் எத்துறையிலும் எடுத்துக்கொண்ட பொருளின் உண்மையைக் குறிக்கும் மற்றொரு சொல் இல்லை யென்பது கூர்ந்து நோக்கி யுளங்கொளற் பாலதாகும். கந்தழி யென்பது கந்து, அழி என்ற இரண்டு சொற்களின் சேர்க்கையாகும். கந்து என்பது எல்லை, மட்டு, தறி, முளை முதலியவற்றைக் குறிக்கும்; அழி யென்பது இல்லாது செய்தல், கெடுதல் என்னும் பொருளது. எனவே கந்தழி என்பது எல்லையற்ற தொரு பொருள் எனப் பொருள்படும்.

மேற்கூறியதி லிருந்து Infinite என்பதற்கு கந்தழி யென்பதே நேர்பொருளா மென்பது புலனும். எனவே Finite என்பது கந்து என்று பொருள்படும் இச்சொற்கள் இக்காலை நிலவும் பல ஆங்கிலத் தமிழகராதிகளில் ஒன்றிலேனும் காணப்படவில்லையே யெனக் கேட்டால் அவ்வகராதிகளெல்லாம் மிக அண்மைக் காலத்தே யெழுந்தவாதலால் அவற்றில் இவை காணப்படுமாறில்லை யென விடுக்க. இச்சொற்களொழிந்த ஏனைய எண்ணிறந்த தமிழ்ச் சொற்கள், இன்றும் தமிழ் மக்களால் வழங்கப்பட்டும் வரும் தூய தமிழ்ச் சொற்கள், பண்டைத் தமிழ் நூல்களிற் பரக்கக் காணப்படும் செந்தமிழ்ச் சொற்கள் இவ்வகராதிகளில் காணப்படாதிருப்பது தமிழின் தவக்குறை யென்றேதான் கருதவேண்டும். அவ்வாறாயின் கந்து என்ற சொல் வழக்காற்றில் உள்ளதுதானோ என்றால் உள்ளது என்றே எடுத்துக் காட்டுதும். குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட இத்தனை தவணைகளில் திருப்பிக் கொடுக்கப்படும் ஒரு கடன் இன்றும் "கந்துக்கடன்" என்றே வழங்கப்படுகிறது. "கந்து கட்டில்லாத பேச்சுப் பேசாதே" என்று வழக்காற்றில் கூறுவதற்கு வரையறை யின்றி வெற்றுரையாடாதே என்பதே பொருள்.

இனி, வட்டக்கூம்பின் finite section ஆன Ellipse என்

பதற்கு நேரான தமிழ்ச் சொல் வட்டக் கூம்பின் கந்துவெட்டு முகம் அல்லது சுருக்கமாக "கந்து வெட்டு'' என்பதாகும். Hyperbola—கூம்பின் கந்தழி வெட்டு, கந்தழிவெட்டு; Parabola கூம்பின் ஒருபோகு கந்தழி வெட்டு, ஒருபோகு கந்தழிவெட்டு.

(தொடரும்.)

---

# மூர்த்தி நாயனார்

[பண்டிதர். A. நடராச பிள்ளையவர்கள்]

## முதற் கூறு

### மதுரைமா நகரம்

பண்டைக் காலத்தில், தமிழ்நாடு மூன்று பெரிய அரசர்களால் ஆளப்பட்டு வந்தது. அவர்கள் சேரர், சோழர், பாண்டியர் எனப் பெயர் பெற்றிருந்தார்கள். அவர்களுள், பாண்டிய மன்னரால் பரிபாலிக்கப்பட்ட நாட்டிற்குப் பாண்டிநாடு எனப் பெயர் வழங்கி வந்தது. இந்நாடு திருநெல்வேலி, இராமநாதபுரம், மதுரை, கோயம்புத்தூர், சேலம், திருச்சிராப்பள்ளி ஜில்லாக்கள் என இப்பொழுது வழங்குகிற நிலப் பரப்புக்களைக் கொண்டதா யிருந்தது. இது சிறப்புப் பெயர் பெற்ற பல செல்வக் குடிமக்களுக்குப் பிறப்பிடமாயும், வாழ்விடமாயும் மலிந்து விளங்கியது. இந்நாட்டில் ஆகாயத்தை யளாவிய மாட மாளிகைகளும், கூட கோபுரங்களும் கணக்கில்லாமற் காணப்பட்டன. அன்பு நிறைந்து ததும்பும் அறிவாளிகள் பலர் அங்குத் தங்கி இருந்தனர்.

இந்நாட்டினூடே தாமிரபர்ணி, வையை என்ற சிறந்த பேராறுகள் இரண்டு வற்றாதோடி வளங்கொடுத்தன. மலை வளங்களை வாரிச் செல்லும் தாமிரபர்ணி கடலொடு கலக்குமிடத்தில் வெள்ளொளியிற் சிறந்த முத்துக்கள் மிகுதியும் அகப்பட்டன. தென்பாலில், பொதியமாமலை பாண்டி நாட்டின் திருமுகம்

போற் பரந்து விளங்கியது. அம்மலையின் கண் சந்தனச்சோலை கள் பல, காண்போர் நெஞ்சைக் கவர்ந்து நின்றன. அவைகள் பசியமேகக் கூட்டங்களைப் போலக் காணப்பட்டன. தென் கடலில் தோன்றி, அச்சோலைகளி னிடையே புகுந்து வரும் தென்றற் காற்று பாண்டி நாட்டு மக்களைப் பலவிதத்திலும் மகிழ்வித்தது. அவ்வாறே, கடலையுண்ட அகத்தியர் பெரு மானல் கண்காணிக்கப்பட்ட செந்தமிழ் மொழி பொதியமா மலையினின்றும் புறப்பட்டுப் பாண்டி மக்களின் புலமையைப் பண்படுத்தியது.

இவ்விதம் பல சிறப்புக்கள் வாய்ந்த பாண்டிமா நாட்டின் தலைநகர் மதுரை மாநகரமாம். இது இக்காலத்தில், தென்னாட் டிற் சிறந்த நகரங்கள் பலவற்றுள் இரண்டாவதாக விளங்கு கின்றது. இதனிடத்தே திருமகள் எந்நாளும் விட்டு விலகாது வாழும் மேன்மை உண்டு. இங்குத் திருமகளை யொத்த பெரு மகளிர்களும், திருமாலைப் போன்ற பல செல்வர்களும் நிறைந் திருந்தனர். பழமை மிக்க முச்சங்கங்கள் நிலைபெற்றிருந்த இம்மதுரைமா நகரின் தெருக்கள்தோறும் நூலாராய்ச்சி மிக்க பல சங்கங்கள் தென்பட்டன; சேல்மீன்கள் துள்ளி விளையாடும் திருக்குளங்கள் தோறும் நன்செய்களில் விளையும் நற்சங்கங்கள் மிகுந்து காணப்பட்டன. நகரின் நடுவே, திருக்கோயி லொன்று இருந்தது. அது, தாமரை மலரினூடே தோன்றும் பொகுட் டினைப் போன்று அங்குப் பொலிந்து காணப்பட்டது. அக் கோவிலினுள்ளே பொற்றாமரைக் குளம் என்ற திருக்குளம் ஒன் றுண்டு. அத்திருக் கோயிலின் பெயர் திருவாலவாய் என்ப தாம். அதன்கண் தமிழ் நூல்களிற் கண்ட தனிப்பொருள் களாகிய இறைவனும் இறைவியும் அடியார்களுக்குக் காட்சி கொடுத்துக் கொண்டு அமர்ந்திருந்தனர். இறைவன் பெயர் சோக்கலிங்கப் பெருமான் என்பதாம். இறைவி பெயர் அங் கயற் கண்ணம்மையாராம்.

அக்கோயிலினை யடுத்து நாற்புறங்களிலும் ஆடிவீதி எனப் பெயர் கொண்ட நான்கு தெருக்கள் காணப்படும். அவைகள் சிவனடியார்கள் வசிக்கும் மண்டபங்களாலும், மடங்களாலும்

சிறந்து விளங்கின. அத்தெருக்களுக்கு வெளியே, கோயிலின் அரணாக நான்கு திருமதில்கள் நின்றிருந்தன. அம்மதில்களை யடுத்த வெளிப்புறங்களில் சித்திரை வீதிகள் நான்கு பார்ப்போர் கண்களையும் நெஞ்சையும் பறித்துக் கொண்டிருந்தன. அவைகள் நான்கும் கீழைச் சித்திரை வீதி, மேலைச் சித்திரை வீதி, தெற்குச் சித்திரை வீதி, வடக்குச் சித்திரை வீதி எனத் திசைகள் காரணமாக வேறுபடுத்தி விளிக்கப்பட்டன. இத்தெருக்களில் அருமறை உணர்ந்த அந்தணர்கள் பலர் கூடி வாழ்ந்து வந்தனர். இங்கு எப்பொழுதும் நான்மறை முழக்கங்கள் நடைபெற்றுக் கொண்டே இருக்கும். இவைகளில் ஆண்டிற் கொருமுறை சித்திரைத் திங்கள், சித்திரை நாள், பூர்ணமி யன்று இறைவனாகிய சொக்கலிங்கப் பெருமான் இறைவியாகிய கயற்கண்ணம்மையாருடன் திருவோலக்கங் கொள்ளும் திருவிழா ஒன்று நடைபெறும். இத்தெருக்களுக்கு அப்புறம், ஆவணி மூல வீதிகள் எனப் பெயர் கொண்ட நான்கு தெருக்களைக் காணலாம். அவைகளும் கீழாவணி மூல வீதி, மேலாவணி மூல வீதி, தெற்காவணி மூல வீதி, வடக்காவணி மூல வீதி எனத் திக்குகளைக் கொண்டு வெவ்வேறு பெயர்கள் பெற்றன. இவ்வீதிகளில் அரசர் குலத்துதித்த அருந்திறன் மறவர்களும், தானைத் தலைவர்களும், குதிரை வீரர்களும், யானைப் படைஞர்களும், தேரூரும் திறலாளிகளும் வாழ்ந்து வந்தனர். இங்கும் ஆண்டிற் கொருமுறை ஆவணித் திங்கள் மூலத் திருநாளில் திருவிழா வொன்று சிறப்பாய் நடக்கும்.

அத்தெருக்களுக்கு அப்பால், மாசி வீதிகள் இருந்தன. அவைகளும் முன்போலவே கீழை மாசி வீதி, மேலை மாசி வீதி, தெற்கு மாசி வீதி, வடக்கு மாசி வீதி என நான்காக வகுக்கப்பட்டுள்ளன. இங்கே வாணிபத்தாற் சிறந்து வளர்நிதி படைத்த வணிக மக்களும், உழவுத் தொழிலால் உயர்குடி மக்களாகிய வேளாண் மைந்தரும் வீற்றிருந்தனர். இங்கும் ஆண்டிற்கொரு முறை மாசித் திங்கள் மகநாளைத் திருநாளாக அந்நகர்க் குடிமக்கள் கொண்டாடுவர். இத்தெருக்களின் வெளிப்புறம், மார்கழி வீதிகள் அல்லது வெளி வீதிகள் என நான்கு வீதிகள்

உண்டு. இவைகளும் மேற்கூறியவாறே திசைகள் காரணமாக வெவ்வேறு பெயர்கள் கொண்டுள்ளன. இவ்விடத்திலும் ஆண்டிற் கொருமுறை மார்கழித் திங்கள், அஷ்டமி திதியில் எல்லாம் வல்ல எம்பெருமான் அங்கயற் கண்ணம்மையாருடன் அடியார்களுக்குக் காட்சி கொடுக்கும் திருவிழா வொன்று நடக்கும். இங்குக் காலாட் படைஞர் பலரும் வசிக்கின்றனர்.

இவைகளுக்குப் புறமே, செண்டு வெளி எனப் பெயர் பெற்ற பெருவழி ஒன்றுண்டு. அது, அந்நகரினை வளைந்து சுற்றி வருவதற்கு இயைந்த வண்ணம் உண்டாக்கிய வொரு பெரும்பாதையாம். இதனிடத்தேதான் யானையேற்றம், குதிரை யோட்டம், தேரூர்தல் முதலிய போர்த்தொழில் முறைகள் புகழுற நடக்கும். இப்பாதையினை யடுத்து, ஆங்காங்கு குதிரைப் பந்திகளும், யானை வரிசைகளும், தேர் நிலையங்களும், கொல்லுலைக் களங்களும், தச்சு வேலைகளும், கன்னர் கைத்தொழில்களும், தட்டார் கைப்பணிகளும், போர்க் கருவிகள் உண்டாக்கு மிடங்களும், படைக்கலப் பயிற்சி செய்யுமிடங்களும் காணப்பட்டன. மேக மண்டலத்தை யளாவிய கோட்டை மதிலொன்று இவைகளை யெல்லாம் சூழ்ந்து நின்றது அகன்று ஆழமாகிய அகழ் ஒன்று அக் கோட்டை மதிலைச். சுற்றிக் கிடந்தது. இவ்விரண்டும் பார்த்தோர் நெஞ்சைப் பதைக்கச் செய்தன.

மேலை வெளி வீதியின் பக்கத்திலே, நாளங்காடி என்ற பெரிய கடைத் தெருவும், திருக்கோயிலின் திருமுன்பினை யடுத்து அந்தியங்காடி என்ற கோயிற் கடைத் தெருவும் இருந்தன. இவ்விரண்டு கடைத் தெருக்களும் பலவிதமான பொருட்களால் நிரம்பப் பெற்றுக் குபேரனது அளகாபுரியைப் போன்று பொலிந்தன. செண்டு வெளி வீதியின் கீழ்பாலுள்ள பெரும் புல் வெளியின் நடுவே, பாண்டி மன்னன் அரண்மனை காண்போர் கண்களைக் கவர்ந்து நின்றது.

அந்நகர்ப் புறமெங்கும் வண்டுகள் நிறைந்து பாடும் வானளாவிய சோலைகள் மிக்கிருந்தன. அச்சோலைகளின் இடைக்

கிடையே மருத நிலங்கள் வளமுற்றிருந்தன. அவற்றில் தாமரைக் காடுகள் மிக நெருங்கி மக்களின் நெஞ்சை மணத்தால் மகிழ்வித்தன. அக்காடுகளினூடே எருமைகள் பாய்ந்து செல்ல, அவற்றின் மடுக்கள் தாமரை மொட்டுகளால் தாக்கப் பெறும்; பெறவே, அவ்வெருமைகள் தமது கன்றுகளை நினைந்தனவாய்ப் பாலைச் சொரியும். அவ்விடத்திலுள்ள சேல்மீன்கள் அப்பாலினை யுண்டு பாய்ந்து துள்ளி விளையாடும்.

---

# மதிப்புரை

## இங்கித மணவியல்

அல்லது

## திருமண நிகழ்ச்சி விளக்கம்

இது 'விபூதி விளக்கம்', 'உருத்திராக்க விளக்கம்' முதலிய ஒழுக்க நூல்களின் ஆசிரியராய் விளங்கும் திருவாளர் துடிசை கிழார் அ. சிதம்பரனுர் M.A.T.S., M.T.S., M.S.S.C., etc., அவர்களால் இயற்றப் பெற்றது. இந்நூல் தமிழர்க்குரிய மணமுறைகளை நனி வகுத்துக் காட்டுகின்றது. தமிழர் மணச் சடங்குகளைத் தமிழ் மந்திரங்களைக் கொண்டே நடத்தும் முறை இதன்கண் தெள்ளிதில் விளக்கப் பெற்றிருக்கின்றது. இந்நூல் தமிழ் மக்களால் பெரிதும் போற்றற்குரியது. இதைப் போன்ற மற்றச் சடங்கு நூல்களையும் தமிழில் இந்நூலாசிரியரவர்களே விரைவில் வெளிப்படுத்துவார்களெனவும் கேட்டு மகிழ்கின்றோம். பல்லாவரம் சுவாமி வேதாசலம் என்னும் ஆசிரியர் மறைமலையடிகள் பெயரால் மறைமலையடிகள் கல்விக் கழகம் என்று ஒன்றை அடிகளின் மாணவர்களில் ஒருவராகிய திருவாளர் T. S. பாலசுந்தரம் பிள்ளையவர்கள் தாமே ஏற்படுத்தி அக்கழக அமைச்சராய் இருந்து அதன் பெயரால் இந்நூலினை வெளிப்படுத்தியிருக்கிறார்கள் எனத் தெரிகின்றோம்.

இஃது ஒவ்வொரு தமிழ் இல்லின்கண்ணும் இருக்க வேண்டிய முதன்மையான நூலாகும். இந்நூலின் விலை அணா 6.

கிடைக்குமிடம்:

பரங்கிமலை, மறைமலையடிகள் கல்விக் கழகம்.

## மதுரைத் தேவாரத் திருப்பதிகங்களும் ஈழநாட்டுத் தேவாரப் பதிகங்களும்

இந்நூல் யாழ்ப்பாணம் திரு. சு. வே. வல்லிபுரம் பிள்ளை அவர்கள் மனைவியின் நினைவுக் குறிகுறியாக மேற்படியார்களின் நன்மகனார் திரு. S. V. V. சோமசுந்தரம் பிள்ளை அவர்களால், வெளியிடப் பெற்றது. ஒரு அணா தபாற்றலை யனுப்புவார்க்கு இஃது இனமாய் அனுப்பப்படும். இது நமது கழகத்தில் கிடைக்கப் பெறும்.



கழக நிறைவேற்றற் கூட்டத்தலைவரும்,

செல்வி இதழாசிரியர் கூட்டத்தலைவருமாகிய

**திரு. மா. வே. நெல்லையப்பபிள்ளை யவர்கள், B. A.**